Regd. No. 2975 ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 342

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN



Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

Released by Maran's Dog ,Toronto, Canada

பேராருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதே ராமானுஜாய நம: திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

Released by Maran's Dog ,Toronto, Canada

நள வருஷ 1976 டிசம்பர், கார்த்திகைமீ

# திருவல்லிக்கேணியில் ஸம்ப்ரோக்ஷண நிகழ்ச்சி

(*M. A.* வேங்கடகிருஷ்ணன்)

திருவல்லிக்கேணியில் ஸ்ரீ அழகிய சிங்கர் சக்கரவர்த்தித்திருமகன் ஸ்ரீரங்கநாதர் முதலிய எம்பெருமான்களுக்கு விமான ஜீர்ணோத்தாரணம் நூதன விமானம் நிர்மாணம் செய்தல் முதலிய திருப்பணிகளுக்காக சுமார் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு பாலாலயம் செய்யப்பட்டிருந்தது. அத்திருப்பணிகள் இந்த மாதம் செவ்வனே முடிந்து விட்டதால் ஸம்ப்ரோக்ஷணம் 22-11-76 முதல் 26-11-76 வரை மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இந்த ஸம்ப்ரோக்ஷணத்தில் அந்வயித்து கைங்கர்யத்தை நடத்துவதற்காக திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டியார் பல திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமிகளுக்கும் ஆஹ்வான பத்திரிகை அனுப்பி அவர்களை திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளச் செய்திருந்தனர். கோயில், திருமலை, பெருமாள் கோயில், திருநாராயணபுரம், ஆழ்வார்திருநகரி, ஸ்ரீபெரும்பூதூர், வானமாமலை முதலிய பல திவ்ய தேசங்களிலிருந்தும் சுமார் நூறு ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்தனர்.

22-11-76 மாலை அங்குரார்ப்பணத்துடன் ஸம்ப்ரோக்ஷண கைங்கர்யங்கள் ஆரம்பமாயின. தினமும் இரண்டுவேளைகளிலும் அருளிச்செயல் ஸேவைகளும் வேத பாராயண கோஷங்களும் வானைப்பிளந்த வண்ணமிருந்தன. இடையில் ப்ரதிதினம் மாலை வேளைகளில் ஸ்வாமிகளனைவரும் சுமார் 4-00 மணிக்கு திருக்கோயில் பரிவாரங்களுடன் வேத பாராயணம் செய்து கொண்டு திருவீதிப்ரதக்ஷிணம் செய்தருளினர். இந்த திருவீதிப்ரதக்ஷிணத்தை எத்தனையும் கண் குளிரக் காணப்பெற்ற இருநிலத்தார்க்கிமையவர் நேரொவ்வார் தாமே'' என்னும்படி இருந்தது. கோஷ்டியாரின் ப்ரார்த்தனைக்கு இணங்கி நம் காஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும் கோஷ்டிக்கு எழுந்தருளியிருந்தது மிகவும் விசேஷமாகும்.

26—11—76 காலை சுமார் 8-30 மணிக்கு சாற்றுமுறை மிகவும் விமரிசையாக நடந்தது, சுமார் 1-30 மணி காலம் சாற்றுமுறை நடந்தது. பிறகு என்னையாளுடையப்பன் ஸ்ரீரங்கநாதனுக்கும் தாயாருக்கும் கோயிலின் உள் ப்ராகாரத்தில் சிறியதிருமடல் கோஷ்டியுடன் புறப்பாடு நடைபெற்றது. நம் P. B. A. ஸ்வாமி இந்தத் திருநக்ஷத்திரத்திலும் தம் திருமேனி அசக்தியைப் பொருள்படுத்தாமலே அந்த கோஷ்டி முழுவதும் அந்வயித்தது வியக்கத்தக்கதாகும். அந்த சிறிய திருமடல் ஸேவையைக் கேளாச் செவிகள் செவியல்ல கேட்டாமே என்றும், நம் ஸ்வாமி அலங்கரித்த அந்த கோஷ்டியைக் காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே என்றும் கூறினால் அது மிகையன்று. பிறகு சுமார் 11 மணிக்கு சக்ரவர்த்தி திருமகனுக்கு புண்யகோடி விமானத்தில் திருவீதிப்புறப்பாடு நடந்தது. மாலை 8-00 மணியளவில் ஸ்ரீ அழகிய சிங்கருக்கு தர்மாதிபீடம் என்று சொல்லப்படும் தங்க மங்களகிரியில் புறப்பாடு நடைபெற்றது. இத்தனை மஹோத்ஸவங்களையும் வைதிக காரியங்களையும் திறம்பட நிர்வஹித்த திருவல்லிக்கேணி உபயவேத கோஷ்டியாருக்குப் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு............அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு என்று மங்களாசாஸனம் செய்து நிற்கிறோம்.

பொலிக! பொலிக!! பொலிக!!!

# ஸ்ரீ ராமாநுஜன்–342



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நளஹ காா்த்திகை மாதம் 10—12—76 | ஸஞ்சிகை 6


## திருமங்கையாழ்வார் திவ்யப்ரபந்த வெளியீடு

ஏற்கனவே நாம் வெளியிட்டிருந்தபடி திருமங்கையாழ்வார் அருளிச்செய்த [*மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கமான] ஆறு திவ்யப்ரபந்தங்களுக்கும் உரை அச்சாகி முடிவுபெற்றுள்ளது. மூன்று அச்சுக்கூடங்களில் அச்சிடப்பட்ட பாரங்களையெல்லாம் ஒன்றுசேர்த்து ஒரே ஸம்புடமாக பயிண்டு செய்வித்து, திருமங்கை மன்னன் திருநக்ஷத்திரத்தன்று திருவாலி திருநகரியில் அரங்கேற்றவிழா நடத்த வேணுமென்று பாரித்திருக்கையில் அதற்குச் சிறியதோர் இடையூறு நேரிட்டது. சென்ற நவம்பர் மீ 26, 27 தேதிகளில் கனமழை பெய்ததில் அச்சுக்கூடத்தில் சில பாரங்கள் ஜலாபிஷேகம் பெற்றதனால் பத்தெட்டு பாரங்கள் மறுபதிப்புச் செய்யவேண்டியதான கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. எதிர்பாராத இந்த ஸம்பவத்தினால் நம்முடையபாரிப்பு பங்கமடைந்துவிட்டது. ஆனாலும், மறுபதிப்புச் செய்யவேண்டிய பாரங்கள் வேகமாகவே அச்சிடப்பட்டு வருகின்றன. மார்கழித் திங்கள் முதல் வாரத்திலேயே ஸ்ரீகோஶம் ஸித்தமாய்விடும். அப்போது நாம் திருப்பாவை யுபந்யாஸ நிமித்தமாக சென்னை மாநகரில் இருக்கவேண்டியிருப்பதால் ஸ்ரீ



பார்த்தஸாரதி யெம்பெருமான் ஸந்நிதியில் அரங்கேற்ற விழாவை நடத்தி ஸ்ரீகோஶத்தை வெளியிட நிச்சயித்திருக்கிறோம். இந்த மநோரதம் எம்பெருமான் திருவருளால் இனிது நிறைவேறவேணும். ... ... ...

— திருமங்களம் —

ஸ்ரீ.

ச்ரிய: காந்தாய நம: ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## திருப்பதி ஸ்ரீ சிறிய ஜீயர் ஸ்வாமி மடம்

# ஸம்ப்ரோக்ஷண அழைப்புப் பத்திரிகை

ச்ரிய: காந்தாய கல்யாணநிதயே நிதயேர்த்திநாம்,
ஸ்ரீ வேங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே,
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் ஸகலசேதந ஸம்ரக்ஷணார்த்தமாசக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திவ்யதேசங்களில் ப்ரதாநங்களான கோயில் திருமலை பெருமாள் கோயில் என்னும் மூன்றினுள் நடுநாயகமாய், பன்னிரண்டு புராணங்களில் புகழப்பட்டதாய், ஆழ்வார்கள் ஒன்பதின்மரால் மங்களாசாஸநம் செய்யப்பட்டதுமான பெரிய திருமலையில் "கலௌ வேங்கட நாயக:" என்றும் "வேங்கடேச ஸமோ தேவோ நபூதோ நபவிஷ்யதி" என்றும் கொண்டாடப்படுபவராய், ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார் "உலகமுண்ட பெருவாயா" 'ஒழிவில் காலமெல்லாம்" என்று தொடங்கும் இரண்டு பதிகங்களாலும் அநுஷ்டித்த—த்வய மந்த்ரார்த்தமான ப்ரபத்திக்கும் கைங்கர்ய ப்ரார்த்தனைக்கும் லக்ஷ்யபூதராய், பின்பு பெரிய திருமலை நம்பிகளின் திருமஞ்சன கைங்கர்யத்திற்கு உகந்தவராய், அவர் தம் மருமகனும், சிஷ்யருமான எம்பெருமானாரால் திருவாழி திருச்சங்கும் திருமார்பு நாச்சியாரும் ஸமர்ப்பிக்கப்பெற்று விளங்குபவராய், அவர் தம்முடைய சிஷ்யரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணனென்னும் ஆசிரியர் ஸுப்ரபாதம் ஸ்தோத்ரம் என்ற நான்கு ஸ்தோத்ரங்களினால் துதிக்கக்கேட்டு அந்தமிலா ஆநந்தமடைந்தவராய், அவற்றை தினந்தோறும் காலையில் திருச்செவி சாத்தியருளும் திருவேங்கடமுடையான் கலியுக ப்ரத்யக்ஷ தேவதையாய் ஸர்வர்க்கும் ஸகலாபேக்ஷிதங்களையும் ப்ரஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருப்பது ஸகல ஜந ப்ரஸித்தமான விஷயம்

அத் திருமலையிலும் கீழ்த்திருப்பதியிலும் முறையே எம்பெருமானாராலும் மணவாளமாமுனிகளாலும் ஸ்தாபிக்கப்பட்ட பெரிய ஜீயர்ஸ்வாமி சிறிய ஜீயர்ஸ்வாமிகளின் மடங்களில், ஜீயர்ஸ்வாமிகள் அவிச்சிந்ந பரம்பரையாய். அந்நாள் தொடங்கி இந்நாள்வரை திருமலையப்பனுக்கும் கோவிந்தராஜனுக்கும் ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து வருவதும் ஸகல ஜகத் ப்ரஸித்தமானதே.

அவற்றில் கீழ்த் திருப்பதியில் உள்ள சிறிய ஜீயர்ஸ்வாமிமடம் மிகவும் ஜீர்ணமாயிருந்து இப்போது எழுந்தருளியுள்ள சிறிய கோவில்கேள்வி அப்பன் கோவிந்தராமாநுஜ (சிறிய) ஜீயர் ஸ்வாமிகளால் பல்லாயிரக்கணக்கில் பணச் செலவிட்டுப் புநருத்தாரணம் செய்யப்பட்ட (ஷை மடத்தின்) ஸம்ப்ரோக்ஷணம் நிகழும் நள ஞு கார்த்திகை மீ 16வ (1-12-76) புதன்கிழமை முதல் கார்த்திகைமீ 21வ (6-12-76) திங்கட்கிழமை வரை நடந்தேறியது. அச்சமயம் உபய வேத வேதாங்க பாராயண கோஷ்டிகளை ஸ்ரீவைஷ்ணவஸ்வாமிகள் பலவரும் எழுந்தருளியிருந்து சிறப்பாக நடத்திவைத்தார்கள். இங்ஙனம், ஸ்ரீகார்யம்

S. V. பாஷ்யமய்யங்கார், சக்ரவர்த்தி ஸ்ரீநிவாசய்யங்கார்.

— [illegible] —

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்ரீ எதிராஜ ஜீயர் மடம்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி பேரருளாள எதிராஜ ஜீயர் ஸ்வாமி நியமனப்படிக்கும், ஸ்ரீ எம்பெருமானார் நியமனப்படிக்கும், மடம் சிஷ்ய பக்தகோடிகள் பிரார்த்தனைப் படிக்கும், திருநாடலங்கரித்த ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியின் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய அங்கீகாரம் செய்த நாதமுனிகள் திருவம்சத்தில் அவதரித்த ஸ்ரீமுஷ்ணம் வெங்கடாச்சாரியார் திருக்குமாரரும், ஸ்ரீ உ. வே. ஸ்ரீபெரும்பூதூர் வேதவாத்தியார் கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமியின் திருப்பேரனுருமான (தௌஹித்ரர்) ஸ்ரீ உ. வே. ராகவாச்சாரியார் ஸ்வாமிகள், நிகழும் நளவ்ஸ கார்த்திகை மீ" 18உ (3—12—1976) வெள்ளிக்கிழமை, அசுவனி நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில், கும்பலக்கினம் பகல் 12-மணிக்கு ஸ்ரீ எம்பெருமானர் திருமுன்பே ஸன்யாஸ ஆச்ரயம் பெற்றுக்கொண்டார். அதையொட்டிமுன் சடங்குகளை முன்னதாகவே பூர்த்தி செய்வித்து யதிதர்ம விஷயமான மந்திரங்களைப் பெற்று துரீயாச்ரமத்தை அங்கீகரித்து அன்றே 19-வது பட்டாபிஷேகமும் கண்டருளியாயிற்று சிறப்புற உபய கோஷ்டி வைபவங்களுடன் மேற்படி பட்டாபிஷேக மஹோத்ஸவம் பூர்த்தியாயிற்று. பக்தகோடிகள், ஆஸ்திகர்கள், ஸ்ரீ வைஷ்ணவ அபிமானிகள், சிஷ்யகோடிகள், பலர் விஜயம் செய்திருந்து மேற்படி வைபவங்களில் கலந்துகொண்டார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

S. R லக்ஷ்மிபதிராஜுலு, காரியதரிசி.

T. சென்னகேசவலு செட்டியார், தலைவர்.

சிஷ்ய சங்கம்:

ஸ்ரீ எதிராஜ ஜீயர் மடம், ஸ்ரீபெரும்பூதூர்,

அலுவலகம்:—691, முல்லாசாஹிப் தெரு, சென்னை-1.

---

ஸ்ரீ:

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

# தனி வழி

(ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார், அட்வொகேட், சென்னை)

திருவாய்மொழி (6-ம பத்து—7-ம் திருவாய்) "உண்ணுஞ்சோறு" என்னும் தசகத்தில் பராங்குசநாயகி (நம்மாழ்வார்) திருக்கோளூர் எம்பெருமான் பக்கல் தமக்கு உண்டாகிய ப்ரேமாதிசயத்தால் 'தந்தையும் தாயுமுற்றாரும் நிற்கத் தனி வழி' எழுந்தருளினபடியைத் திருத்தாயார் அலற்றும் பாசுரங்களைலேகாண்கிறோம். பெரிய திருமொழி (3ம் பத்து—7ம் திருமொழி) 'கள்வன்கொல்' என்னும் தசகத்தில் பரகாலநாயகியை (திருமங்கையாழ்வாரை) வயலாலி மணவாளன் கையைப் பிடித்து அழைத்துப்போக அவ்விஷயத்தில் தாய்மனம் நின்றிரங்கும்படிகளைக்

காண்கிறோம். இவ்விரு நாயகிகளுள் எவர் விஷயத்தில் அதிகக்கவலை ஏற்பட வேண்டும் என்கிற ஒரு ரஸமான ஸர்வாதம் ஸ்ரீ ஆளவந்தார் கோஷ்டியில் ஏற்பட்டதாகவும், அப்பொழுது தனிவழி போன நாயகிக்கன்றி துணைவழி சென்ற பரகால்நாயகிக்கே கரையவேண்டுமென்று ஸ்ரீஆளவந்தார் திருவுள்ளமானதாகவும் ஒரு அழகிய ஐதிஹ்யம் கூறப்பட்டு வருகிறது.

திருமங்கையாழ்வார் ப்ரக்ருதியைக் காட்டிலும் நம்மாழ்வார் ப்ரக்ருதி கடினமென்றே கூறலாம். முந்துறமுன்னம் எம்பெருமானால் மயர்வற மதிநலமருளப்பெற்றவர் நம்மாழ்வார். வழிக்கொள்ளையில் உத்யோகித்து நின்றபோது திருமாலை நேரில் கண்டு பின்பு அவரிடத்தில் ஸர்வார்த்த க்ரஹணம் செய்தவர் மங்கைமன்னன். ஆழ்வார்களுள் பேயாழ்வார், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், கலியன் இவர்கள் நால்வரும் பெருமாளை முதலில்கண்டு பிறகு பாடத்தொடங்கியவர்கள். இவர்கள் பெருமையை 'கண்டு வணங்கினார்க்கு என்னுங்கொல்' என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தால் அறியலாம். ஆழ்வார்கள் அனைவருமே தத்வதர்சிகளாயிருக்க அவர்களுள் மேற்கூறிய நால்வரும் பரதத்வதர்சிகள். அந்நால்வரும் பெரியாழ்வாருள்ளும், திருமங்கை மன்னனும் கண்டதனால் தான் பாடியவர்கள்.

திருமங்கையாழ்வார் தாம் கண்ட காட்சியை ஒரு சிறிதும் மறவாது திவ்ய மங்கள விக்ரஹத்தில் ஈடுபட்டு திவ்யதேசங்களில் மண்டியிருந்தமை அவர் பாசுரங்களால் வெளியாகிறது. நம்மாழ்வாருக்கோ மதி நலத்தின் செய்கையாயிற்றுப் பாசுரம்பாடுதல். ஞானம் முதிர்ந்து பேரவா ஏற்பட்டு அது எம்பெருமானைத் தேடித் தனியே செல்லும் தைரியத்தை விளைவித்தது. இவர் பிராட்டி தசையை அடைந்து நிற்கும்போது இவருடைய திடமான அத்யவஸாயந்தான் "அவனூர் வினவித் திண்ணமென்னிளமான் புகுமூர் திருக்கோளூரே," நிச்சயமாய் இவள் திருக்கோளூர் புகுந்துவிடுவாள் என்று பொருள் படும்படியான திருத்தாயார் பாசுரத்தால் பேசப்படுவது. இங்கே பெற்றவளுக்குச் சந்தேஹம் அவ்விடம் போய்ச்சேருவளோ என்ற விஷயமாக ஏற்பட்டதன்று. "போருங்கொல்" (மீண்டும் இங்கே வருவளோ?) என்றல்லவோ இவள் தாயார் வருந்துவது!

கைகோத்துக்கொண்டு கிளம்பிய வயலாலிமணவாளனையும் பரகால்நாயகியையும் குறித்துப் பரிதபிக்கும் தாய்க்கு ஏற்படும் சந்தேஹமோ "அணியாலி புகுவர்கொலோ", புனலாலிபுகுவர்கொலோ திருவாலிபோய்ச்சேருவார்களோ என்பதே. அவன் வயலாலி மணவாளன்தான். அவ்வூருக்கே அதிபதி, எனினும் அவ்வூர் போய்ச் சேருவதில் அதிசங்கை பண்ணவேண்டி வருகிறது. இவன் ஸாந்நித்யத்தாலே கைகேயிமஹாராஜாவிடத்தில் தான்பெற்ற வரங்களைப் பெருமானிடத்தில் சொல்லும்போது "தத்ர மே யாசிதோ ராஜா பரதஸ்யாபிஷேசனம், கமனம் தண்டகாரண்யே தவசாத்யைவ ராகவ" என்று தானே சொன்னாள். ஆகவே சிற்றவைபணி தண்டகாரண்யம் புகவேண்டும் என்பதுதானே. அதைச் சிரமேலேற்று அனைவரிடத்திலும் விடைபெற்றுச் செல்லும்போதும் "கமிஷ்யே தண்டகாரண்யம்" என்று சொல்லித் தாம் பித்ருவாக்ய பரிபாலனார்த்தம் தண்டகை செல்வதாகவே சங்கல்பித்துப்புறப்பட்டவர், பிறகு பிராட்டி ஸாந்நித்த்யத்திலே

மயங்கி, பிரதிஜ்ஞையையும் மறந்து, சித்ரகூடத்திலே ஸ்திரவாஸம் செய்துவிட வில்லையா? 'வைதேஹி! ரமஸே சச்சித் சித்ரகூடே மயாஸஹ' என்று இருந்தவிடமும் நினைப்பூட்ட வேண்டிய நிலைமையன்றோ பிராட்டிக்கு ஏற்பட்டுவிட்டது! பரஸ்பர ரமிப்பினால் அனைத்தையும் மறந்து நிற்கக்கூடியவர்களென்று ஏற்பட வில்லையா இதனால்? பின்பு பரதாதிகள் வந்து உணர்த்திய பிறகுதானே சித்ர கூடத்தைவிட்டு தண்டகாரண்யமேற எழுந்தருளியது. சித்ரகூட வ்ருத்தாந்தம் முழுமையும் அயோத்யா காண்டத்திலே சேர்த்திருக்கிறார் மகரிஷி. "ப்ரவிச்ய து மஹாரண்யம் தண்டகாரண்யம் ஆத்மவான்" என்று ஆரண்யகாண்ட ஆரம்பத்தில் தானே தண்டகாப்ரவேசம். ஆகவே புறப்பட்ட இடத்திற்குப் போய்ச்சேருவது இருவராய்ப் புறப்பட்டபோது நிச்சயமில்லை. அம்மட்டும் சத்ருக்கள் இடமாகிய லங்காத்வாரத்தில் போய்ச்சேராமலிருந்தார்களே என்று ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். "தி ஸ்து யுவயோ: ஸ்வாதந்த்ரிய மத்யங்குசம்" என்றிறே இவர்கள் பக்கல் ப்ரேமையுடையோர் பாசுரம். பொய்மானைத்தாவென்று கேட்பவரும் அதன்பின் செல்பவருமான இவ்விருவரைக் கேட்பாருமில்லையே! அவர்கள் அத்தனை ஸ்வதந்திரர்களன்றோ, என்று அதிகமாகக் கலங்கவேண்டி வருகிறது.

இந்தக் கலக்கத்தினழகை "நெடுமால் துணையாய்ப் போயின பூங்கொடியாள் புனலாலி புகுவர் கொலோ"வென்றுபாடிய "கள்வன் கொல்" பதிகத்தைப்படித்து அனைவரும் அனுபவிக்கவேண்டுமென்று அடியேன் அவா. பகவத் விஷயத்தில் துணைவழியைக் காட்டினும் தனிவழிக்கு ஏற்றமதிகம் போலும்...[ஆமாம்-அண்ணா]

---

பாண்டிவாழும் பண்பாளர்

# R. ஜகந்நாதையங்கார் ஸ்வாமியின்
# ஷஷ்டியப்தபூர்த்தி நிகழ்ச்சி

திருமலை அநந்தாண்பிள்ளை திருநாராயணபுரம் பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியால் தொகுக்கப்பெற்றது.

நிகழும் நள ஆண்டு கார்த்திகைமீ 3உ வியாழக்கிழமை ஹஸ்த நக்ஷத்திரத் தன்று (18-11-76) அன்று நடைபெற்ற ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி திருக்கல்யாண வைபவ நிகழ்ச்சிகள் வருமாறு:—

இந்த ஷஷ்ட்யப்தபூர்த்தி திருக்கல்யாண வைபவம் 13-11-76 சனிக்கிழமை முதல் 18-11-76 வியாழன் முடிய 6 நாட்கள் ஸ்ரீமான் ஜகந்நாதையங்காருடைய இல்லத்தில் கொண்டாடப்பட்டது.

இதற்குப் பூர்வாங்கமாக 5—11—76 முதல் 12—11—76 முடிய 8 நாட்கள் தம் க்ருஹத்திலேயே பாண்டியில் வாழும் ப்ரஸித்தர்களான சில ஆப்தர்களை

மட்டுமே அழைத்துவைத்து ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியைக்கொண்டு ஸ்ரீராமாயண உபந்யாஸம் நடத்தி பட்டாபிஷேகம் செய்து ஸ்வாமிக்கும் மிகச்சிறந்த முறையில் ஸன்மானத்தைத் தாமும் செய்து பிறரைக் கொண்டும் செய்வித்தார்.

13—11—76 சனிக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு, திருக்கண்ணபுரம் எழுந்தருளும் வழியில் பாண்டிக்கு எழுந்தருளின ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி திருமலை சின்னகேள்விஜீயர் கோவிந்தராஜ ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திவ்யப்ரபந்த வேத பாராயணங்களையும் இதிஹாஸ புராண படனங்களையும் தொடங்கிவைத்து கோஷ்டியிலும் எழுந்தருளியிருந்தார்.

அன்று இரவு 8 மணிக்கு பாண்டியில் ப்ரஸித்தமான பல மடாதிபதிகளாலும் ஆசார்யபுருஷர்களாலும் தீர்த்த பரிக்ரஹம் பண்ணப்பட்ட வரதராஜன் ஸந்நிதியில் திருமலை சின்னகேள்விஜீயர் ஸ்வாமிக்கு பூர்ண கும்ப வரவேற்புடன் விசேஷமான ஸ்ரீ சடகோப மர்யாதை நடந்து ஜீயர் ஸ்வாமியும் எம்பெருமானை மங்களாசாஸநம் செய்தருளினர். 14—11—76 ஞாயிற்றுக்கிழமை காலை 7-30 மணிக்குத் தொடங்கப்பட்ட திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டியிலும் ஜீயர் ஸ்வாமி எழுந்தருளியிருந்து பகல் 11 மணிக்கு முதலாயிரத்தைச் சாற்றுமுறை செய்து ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமிக்கும் குடும்பத்தாருக்கும் ஸ்ரீபாததீர்த்தம் ஸாதித்து பிற்பகல் இரண்டு மணிக்கு பாண்டியிலிருந்து புறப்பட்டு திருக்கண்ணபுரம் எழுந்தருளினர்.

அன்று இரவு 8 மணி முதல் 10 மணி வரை திருமலை அநந்தாண்பிள்ளை ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியின் முன்னுரை பின்னுரையுடன் ஸ்ரீ உ. வே. வித்வான் மேல்பாக்கம் நரஸிம்ஹாசாரியர்ஸ்வாமி "அர்ச்சாவதார ஸௌலப்யம்" என்கிற தலைப்பில் மிக அழகாக உபந்யாஸம் செய்தருளினர்.

15—11—76 திங்கட்கிழமை காலையும் பிற்பகலும் திவ்யப்ரபந்தஸேவையும் வேதபாராயணமும் நடந்து இரவு 7-30 மணி முதல் 10 மணி வரை ஸ்ரீ உ. வே. எம்பார் விஜயராகவாசாரியர் ஸ்வாமியால் குசேலோபாக்யாந உபந்யாஸமும், ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகம் ஸ்வாமியால் எம்மா, ஒழி, நெடு, வேய் என்கிற திருவாய்மொழிகளைக்கொண்டு சுருக்கமாக "புருஷார்த்தம்" என்கிற தலைப்பில் உபந்யாஸமும் நடைபெற்றது.

16—11—76 செவ்வாய்க்கிழமை காலை திவ்யப்ரபந்த ஸேவையும் வேதபாராயணமும் முடிந்து சாத்தானவுடன், பகல் 11 மணிக்கு ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தம் பெரிய ஜாமாதா ஸ்ரீ உ. வே. வித்வான் திருமலை அநந்தாண்பிள்ளை அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி M.A., உடனும் அவர் குமாரனும், தௌஹித்ரனுமான ஸ்ரீமான் அநந்தாழ்வான் B.A., உடனும் பௌத்ரன் சிரஞ்சீவி ராஜஹம்ஸத்துடனும் எழுந்தருளி பூர்ண கும்ப மர்யாதைகளுடன் ஸ்ரீமாந் ஜகந்நாதையங்கார் ஸ்வாமியால் வர

வேற்கப்பட்டு, அன்று காலையிலேயே எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ. வே. வித்வான் வாகம்ருதவர்ஷி K. வரதாசாரியர் ஸ்வாமியுடனும், ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகஸ்வாமியுடனும் அளவளாவி ஸ்ரீமாந் ஜகந்நாதையங்காரையும் அவரின்பத்னி புத்ரி ஜாமாதா பௌத்ரி தௌஹித்ரர்களையும் பந்துவர்க்கத்தையும் குளிரக் கடாக்ஷித்து இன்சொற்களாலும் மங்களாசாஸநத்தாலும் உகப்பித்து, பிற்பகல் 3 மணிக்கு திருவாய்மொழி ஸேவையைத் தொடங்கிவைத்து கோஷ்டியில் எழுந்தருளியிருந்து இரவு 7 மணி முதல் 9 மணி வரை, ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமி விஷயமாக தாம் அருளிய பஞ்சரத்ந பத்யமாலிகையையும் வெண்பாக்களையும் ஸ்ரீமான் அநந்தாழ்வான் ராகமாலிகையில் பாடியபிறகு ஸ்வாமி தம் தளர்வையும் பொருட்படுத்தாமல் முதலில் நின்றுகொண்டும் பிறகு சேரில் (Chair) வீற்றிருந்தும் அவைகளின் பொருள்களை விவரித்து மிகப் பெரிய உபந்யாஸம் செய்தருளி ஸ்ரீமான் ஜகந்நாதையங்காருக்கு பட்டாடை போர்த்தியருளினர். ஸ்ரீமான் ஜகந்நாதையங்காரும் காசிச்சால்வையொன்றை ஸ்வாமிக்கு போர்த்த, அதனை ஸ்வாமி ஜகந்நாதையங்கார் ஸ்வாமி ஷஷ்ட்யப்தபூர்த்தி கார்யங்களை அவரிடங்கொண்ட ஸௌஹார்த்தத்தால் பொறுப்பேற்று நிர்வஹித்துவரும் ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் ஸ்வாமிக்கு ஆங்கே அப்போதே அழைத்துப் போர்த்தியருளினர்.

பிறகு ஸ்வாமியின் பெரிய ஜாமாதா ஸ்ரீ உ. வே. தி. அ. ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமியும் ஸ்ரீராமாயணத்திலிருந்து மிகரஸகனமான ஓர் விஷயத்தை உபந்யஸித்து ஸ்ரீமாந் ஜகந்நாதையங்காருக்கு ஓர் சால்வை போர்த்தியருளினர். பிறகு ஸ்ரீ உ. வே. வாகம்ருதவர்ஷி வேளுக்குடி K. வரதாசாரியார் ஸ்வாமியும் அர்த்தபஞ்சகத்தில் ஒன்றான புருஷார்த்த ஸ்வரூபத்தை எம்மா ஒழி நெடு வேய் என்கிற திருவாய்மொழிகளைக்கொண்டு மற்றும் பற்பல விஷயங்களுடன் கூட்டி உபந்யஸித்தருளினர். ஜகந்நாதையங்கார் ஸ்வாமியால் ஸ்வாமி முதல் எல்லாருக்கும் ஸம்பாவனைகள் ஸமர்ப்பிக்கப்பட்டன. தம் திருமேனியின் தளர்த்தியால் காஞ்சியிலிருந்து எழுந்தருளவே ஸம்மதியாத ஸ்வாமி ஜகந்நாதைய்யங்காரின் ஆர்த்தியின் கனத்தை அவர் விண்ணப்பத்தால் அறிந்து ஒருநாள் மட்டும் 4 மணி நேரமே பாண்டியில் ஜகந்நாதையங்கார் அகத்தில்தங்க நினைத்து எழுந்தருளியவர் 10 மணி காலம் தங்கி இரவு 9-30 மணிக்குமேல்தான் பாண்டியிலிருந்து புறப்பட்டு காஞ்சீ எழுந்தருளினர். ஸ்வாமி எழுந்தருளி அநுக்ரஹித்த இந்நிகழ்ச்சியும், திருமலை ஜீயர் ஸ்வாமி எழுந்தருளிய நிகழ்ச்சியுமே ஜகந்நாதையங்காரின் ஷஷ்ட்யப்தபூர்த்தி வைபவத்தில் மிகச்சிறந்த நிகழ்ச்சியாக வந்திருந்த எல்லோருமே மதித்தார்கள்: ஜகந்நாதையங்கார் ஸ்வாமியும் நினைதொறும் சொல்லுந்தொறும் கரைந்துருகிநிற்கிறார்.

17—11—76 புதன்கிழமை காலைமாலை உடையவேத பாராயணங்கள் முடிந்ததும். மாலை 4 மணி தொடங்கி 7 மணிவரை பல வித்வான்கள் சொற்பொழிவாற்றினர். அவர்கள், ஸ்ரீ உ. வே. குண்டலம் திருமலையங்கார் ஸ்வாமி, மதுரை ரங்கராஜமையங்கார் ஸ்வாமி, S. V. வரதராஜ ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம், அத்யாபகம் பாஷ்யமையங்கார் ஸ்வாமி, வானமாமலை சடகோபையங்கார் ஸ்வாமி காரைக்கால் தமிழ்வித்வான். கு. ரங்கநாதையங்கார் ஆகியோராவர். இரவு 7க்கு

ஷஷ்ட்யப்தபூர்த்திக்குப் பூர்வாங்கமாக கடஸ்தாபநமும் ஜபாதிகளும் நடந்தேறின. இரவு 7-30 மணிக்கு பாண்டி மாநிலத்தில் சிப்-ஸெகெரெட்ரி ஸ்ரீமான் E.S. பார்த்தஸாரதி I.A.S. அவர்களால், டல மஹநீயர்களின் மங்களாசாஸநமும் கட்டுரைகளும், ஸ்ரீ வடுகநம்பி ஸாதித்த, ஸ்ரீஸுதர்சந ஆசிரியரின் தமிழ் விரிவுரையுடன் கூடின எதிராஜவைபவமும் அடங்கிய 150 பக்கங்கள் கொண்ட மிக நேர்த்தியான ஸ்ரீஜகந்நாதையங்கார் ஷஷ்ட்யப்தபூர்த்தி மலர் வெளியிடப்பட்டது. அவ்வமயம் அவர் ஸ்ரீஜகந்நாதையங்காரைப்பற்றின தம் அநுபவத்தையும் கூறி மலரில் கண்டவைகள் யாவும் உண்மை எனப் பேசிப் புகழ்ந்தார். பிறகு மலரில், ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் ஸ்வாமிதாம் எழுதிய "யான் கண்ட பாண்டி ஜகந்நாதையங்கார் ஸ்வாமி" என்னும் கட்டுரையை வாசிக்க மலர் வெளியீட்டு விழா இனிதே முடிவுற்றது.

பிறகு இரவு 8 மணியிலிருந்து 10 மணிவரை ஸ்ரீ உ. வே. வித்வான் பிள்ளைலோகம் பாஷ்யகாராசாரியர் ஸ்வாமியுடையவும், ஸ்ரீ. உ. வே. வித்வான் புத்தூர் அட்வொகேட் ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன ஆசிரியர் S. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியுடையவும், 'மங்களாசாஸநம்' என்னும் உபந்யாஸமும், 'அதிதி தேவோபவ' என்னும் உபந்யாஸமும் சேலம் தமிழ் வித்வான் நரஸிம்ஹையங்காருடைய சொற்பொழிவும் நடந்து ஸ்ரீ. உ. வே சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியால் முடிவுரையும் வழங்கப்பட்டு உபந்யாஸவைபவமும் இனிதே முடிவுற்றது.

இனி ஷஷ்டியப்தபூர்த்தி திருக்கல்யாண தினமாகிய 18—11—76 வியாழக்கிழமையன்று நடந்தேறிய நிகழ்ச்சிகள் வருமாறு. காலை 7 மணி தொடங்கி 8-30 வரை திவ்யப்ரபந்தவேதபாராயண ஸேவையும் திவ்யப்ரபந்த வேத இதிஹாஸபுராண ஸ்ரீபாஷ்யாதி சாற்றுமுறைகளும் நடந்து, அத்யாபக வேதபாராயண ஸ்வாமிகளுக்கு ஸம்பாவனையும் ஸமர்ப்பிக்கப்பட்டது. காலை 9 மணியிலிருந்து 10-30 மணிவரை இவ்வூர் வரதராஜப்பெருமாள் ஸந்நிதியில் வரதராஜன் மூலவர் உத்ஸவர் இருவருக்கும் விசேஷ திருமஞ்சநமும் விசேஷமாக திருப்பாவை கோஷ்டியும் தீர்த்தப்ரஸாத விநியோகமும் நடந்தது.

காலை 9 மணியிலிருந்து ஹோமாதிகள் நடந்து தம்பதிகளுக்கு கும்பதீர்த்த ஸ்நாநமும் நடந்தது. பகல் 11 மணியிலிருந்து 12-30 வரை ஸ்ரீ உ. வே. குமாரவாடி இராமாநுஜாசாரியர் ஸ்வாமியுடைய மங்களாசாஸநமும், ஸ்ரீமான் S. V. வரதராஜ ஐயங்கார் ஸ்வாமியால் வாழ்த்துப்பா வாசித்தளித்தலும் நடந்து ஸ்ரீமான் பூதூர் தமிழ் வித்வான் க்ருஷ்ணஸ்வாமி ரெட்டியாரின் வாழ்த்துப்பா ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரால் விளக்கத்துடன் வாசித்தளிக்கப்பட்டது.

பிறகு மங்களாசாஸந மலரில் அச்சிடப்பட்டிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி அஹோபிலமடம் அழகிய சிங்கர் ஸ்வாமி மங்களாசாஸநம் முதல் பலபேருடைய மங்களாசாஸநங்களும் ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் ஸ்வாமியால் வாசிக்கப்பட்டன. பிறகு 12-30 மணிக்கு சுபமுஹூர்த்தத்தில் திருமாங்கல்யதாரணமும பெரியோர்களுடைய ஆசியுடன் இனிதே நடந்து முடிந்தது.

பிறகு கோயில் முதலான 135 திவ்யதேசத்தெம்பெருமான்களின் மாலை ப்ரஸாதம் தம்பதிகளுக்கு அணிவிக்கப்பட்டு திவ்யதேசத்தெம்பெருமான்களுக்கு ஸம்பாவனை ஸமர்ப்பிக்கப்பட்டது. பிறகு அக்ஷதை ஆசீர்வாதமும் நடந்தது.

பிறகு பந்துமித்ரர்களுடைய ஆசீர்வாத பஹுமானங்களும் நடந்தன. தம்பதிகளால் பந்துவர்க்கத்தாரும் ஸன்மானிக்கப்பட்டார்கள்.

பிறகு, ஆசார்ய ஸம்பாவனையும் வித்வத் ஸம்பாவனைகளும் ப்ருஹஸ்பதி ஸம்பாவனையும் நடந்தது. பிறகு ஸபாதாம்பூலம் முதலியன பூரிதக்ஷிணையுடன் நடந்தேறி அக்ஷதை ஆசீர்வாதத்துடனும் மங்களஹாரத்தியுடனும் ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமியின் ஷஷ்டயப்த பூர்த்தி திருக்கல்யாணம் இனிதே முற்றுப் பெற்றது.

18—11—76 ஆம் தேதியிலிருந்தே ஜகந்நாதையங்கார் க்ருஹத்துக்கு வலது பக்கத்துப் பெரிய க்ருஹத்தில் அத்யாபக வேதபாராயண ஸ்வாமிகளுக்கும் பந்துவர்க்கத்தாருக்கும் ஆப்த நண்பர்களுக்கும் வைதிக ஆசாரம் வழுவாமல் பெருமாளும் அமுது செய்துபோரும்படிக்கு விசேஷமாக இரண்டுவேளையும் ததீயாராதனம் பாலபோகத்துடன் நடந்து 18—11—76 திருக்கல்யாணத்தினன்று ஸ்ரீமான் ஜகந்நாதையங்காருடைய விருந்தோம்பலைக் காட்டும் வகையில் விசேஷமான ஸார்த்த ததீயாராதனமும் நடந்தேறியது. ... ...

பாண்டி. ஸ்ரீமான். R. ஜகந்நாதய்யங்காருடைய ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில்

ஸ்ரீகாஞ்சீ. P. B. A. ஸ்வாமிகள் கல்யாண தம்பதிகளுக்கு மங்களாசாஸனம் செய்தல்



ஸ்ரீமத்பரமஹம்ஸ. திருமலை திருப்பதி. சிறியகேள்வி ஜீயர். கோவிந்த ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

2. கோயில்வித்வான் தி.அ. சதாபிஷேகம். கோவிந்தநரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி.

3. திருவாலி திருநகரி மேலத்திரு மாளிகை. எம்பார் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி.

**—ஸ்ரீ ஜகன்னாத தம்பதிகள்—**

ஸ்ரீமான்கள்,

K. தேவநாதன்
நெய்வேலி திருமலாசாரியர்
மேஜர். ஸ்ரீனிவாஸன்
ரெங்கராஜன்
டாக்டர். T. V. S. ஜகன்னாதன், P H. D.
R. ஜகன்னாதன்,
(குமாரர்களுடனும் மைத்துனர்களுடன்)





ஸ்ரீமான். மதுரை.
R. ரங்கராஜன், M.A., B T.
அவர்கள் உபந்யாஸம் செய்கிறார்.



ஸ்ரீமான் R. ஜகன்னாதய்யங்காருடைய
குடும்பக் காட்சி
Dr. T. P. R. A.R. சடகோபாசார், கோபு.
சக்கரவர்த்தி ஆகியோருடன்



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி
சின்ன கேள்வி ஜீயர் ஸ்வாமி திவ்யப்ரபந்த
ஸேவை தொடங்கியருள்கிறார்

ஸ்ரீமான் உ. வே. P. B. A. ஸ்வாமி வேளுக்குடி ஸ்வாமி தி. அ. அக்காரக்கனி ஸ்வாமி சதாபிஷேகம ஸ்வாமி, புத்தூர் வக்கீல் ஸ்வாமி, ஆகியோருடன் ஷஷ்டியப்தபூர்த்தி கல்யாண கோஷ்டி.





ஸ்ரீமான் உ. வே. P. B. A. ஸ்வாமி, கல்யாண தம்பதிகளின் மங்களாசாஸந பஞ்சரத்ன மாலிகையை வாசித்து ஆசீர்வசதம் செய்வது.

நித்யஸ்ரீர் நித்யமங்களம்

# உபயவேதாந்த வினவிடைகள் (4)

(முன்னிதழ்த் தொடர்ச்சி)

**கண்ணன்**—இன்று நான் பலதிறத்து விஷயங்களைக் கேட்டறிய விரும்பி வந்திருக்கிறேன். இதோ கையில் ஒரு குறிப்புத்தாள் (Note) வைத்துக்கொண்டிருக்கிறேன். பார்த்தீரா? எனக்கே யுண்டான பல ஸந்தேஹங்களையும், என்னிடத்தில் பிறர் சிலர் ப்ரஸ்தாவித்த ஸந்தேஹங்களையும் இதில் குறித்துவைத்துக் கொண்டிருக்கிறேன். எதைக் கேட்டாலும் புத்தகம் பாராமல் உடனுக்குடனே விடையிறுக்கக்கூடிய ஆற்றல் உமக்கிருப்பதால் இன்றைக்கு ஒரு இருபது வினவிடைகளாவது முடிவுபெறவேணுமென்று ஆசைப்படுகிறேன்.

**ராமன்**—மிகவும் ஸந்தோஷம். உன்னுடைய சில வினக்களுக்கு விடையிறுக்கப் புத்தகம் பார்க்கவேண்டியிருந்தாலும் எனக்கு நேத்ரபாடவக்குறைவு இருப்பதனால் புத்தகம் பார்க்க முடியாது. என்னுடைய ஞாபகஶக்தியைக் கொண்டு எவ்வளவு விடையிறுக்க ஶக்யமோ, அதற்கு வஞ்சனையில்லை. கேட்டுக் கொண்டேவா, சொல்லிக்கொண்டே வருகிறேன்.

**வின:**— ஆழ்வார்களில் ஒருவரைப் பெரியாழ்வாரென்கிறோம்; அவருடைய நிஜமான திருநாமம் விஷ்ணுசித்தரென்றும் பட்டநாதரென்றும் சொல்லப்படுகிறது. பெரியாழ்வாரென்கிற திருநாமம் எதனால் அவர்க்கு ஆயிற்று? ஆழ்வார்களுள் அவர் மூத்தவருமல்லர்; நம்மாழ்வார் திருமங்கையாழ்வாரைப்போலே ஆயிரக்கணக்கான பாசுரங்களைப் பாடினவருமல்லர். *பொய்கையார் பூதத்தார் பேயார்புகழ்மழிசையையன் அருள்மாறன்சேரலர்கோன் துய்யபட்டநாதனென்று ஆழ்வார்களின் திருவவதாரக்ரமத்தில் இவ்வாழ்வார் ஏழாமவர்; ஆகவே பிராயத்தினால் பெரியவரல்லர்; இவர் அருளிச்செய்த பாசுரங்கள் நானூற்றுச் சொச்சம் பாசுரங்களே யாதலால் ஆயிரக்கணக்கான பாசுரங்கள் பாடினவருமல்லர்; அப்படியிருக்க, எதனால் இவரைப் பெரியாழ்வாரென்கிறது? (விடை) இதற்கு உரிய ஸமாதானம் உபதேச ரத்தினமாலையில் "மங்களா சாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள். தங்கள் ஆர்வத்தளவுதானன்றிப்-பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான், பெரியாழ்வாரென்னும் பெயர்" என்கிற பாசுரத்தில் வெளிவந்துள்ளதுகாண். எம்பெருமானைக்கண்டவாறே அவனிடத்துத்தமக்கொரு நன்மையைக் கோலாமல் அவன் அபாயமொன்றுமின்றி வாழ்ந்திருப்பதையே தமக்குப் பெருத்த நன்மையாகக்கொண்டு பல்லாண்டுபாடினபெருமை இவர்க்கு மட்டுமே அஸாதாரணமாக இவருடைய சரிதையில் காண்பதனால் இதைவிட்டு இவர் பெரியாழ்வாரெனப்பட்டார்.

**வின:**— ஸ்ரீராமாயணத்தில் பேசப்படுகிற ஜடாயு மஹாராஜரை நம் ஆசாரியர்கள் பெரிய வுடையார் என வழங்கிவருகின்றார்களே; ஸ்ரீவசனபூஷணத்தில் "பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூரரையரும் உடம்பையுபேக்ஷித்தார்கள்" என்னும் சூர்ணையில் பெரியவுடையாரெனப்படுபவர் ஜடாயுமஹாராஜர்தானே;

எதனால் அவர்க்குப் பெரியவுடையாரென்று திருநாமமாயிற்று? (விடை) அவர்க்கும் இதுவே காரணந்தான். ஸ்ரீராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனுர்க்கு மங்களா சாஸனம் செய்தவர்கள் பலபலருளரெனினும் இந்த ஜடாயு மஹாராஜருடைய மங்களாசாஸனந்தான் தலைசிறந்ததாயிற்று. அதாவது—பெருமாள் பிராட்டியைப் பிரிந்து தேடத்தகாத விடங்களிலும் தேடிக்கொண்டு வருவதைக்கண்ட ஜடாயு தாம் மூர்ச்சையாயிருக்கச் செய்தேயும் தம்முடைய ரக்ஷையில் கண்ணோட்டமின்றிக்கே "யாம் ஓஷதிமிவ ஆயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே" என்று பெருமானை ஆயுஷ்மந்! என்று விளித்ததுண்டே இது மிகச்சிறந்த மங்களாசாஸனம். நீர் தீர்க்கமான ஆயுள் பெற்று வாழவேணுமென்பதே அந்த விளியின் கருத்து. அந்த ஸமயத்தில் இங்ஙனேயிவர் மங்களாசாஸனம் செய்யவேதான் இராமபிரான் உயிர் தரிக்கப் பெற்றுரென்பது நம் ஆசாரியர்களின் நிர்வாஹம். இதையிட்டே அவரைப் பெரியவுடையாரென்றது. 

வினா:— பெரியாழ்வாரென்கிற திருநாமத்திற்கு தேவரீர் ஸாதித்த காரணம் தவிர வேறொரு காரணமும் கேட்டிருக்கதுண்டு; நினைவுக்கு வரவில்லை; தேவரீருக்குத் தெரிந்திருக்குமே; அதையும் ஸாதிக்கக் கேட்க விரும்புகிறேன். (விடை) ஆமாம்; வேறொரு நிர்வாஹமுமுண்டு. வேதாந்த தேசிகன் கோதாஸ்துதியில் "தாதஸ்து தே மதுபித:" என்கிற சுலோகத்தில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை நித்தியமும் எம்பெருமானுக்கு உபஹரித்து வந்ததனால் பெரியாழ்வாரென்கிற திருநாமம் பெற்றார் என்று கூறியுள்ளார்: 'த்வத்பௌலிகந்த ஸுபகாம் உபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தர பதாநுகுணம் ப்ரஸாதம்" என்பது அந்த ஸ்ரீஸூக்தி. இதில் "மஹத்தாபதமென்றது பெரியாழ்வாரென்பதை நோக்கியே. இப்படியும் ஒரு நிர்வாஹமுண்டென்று கொள்வதில் குறையொன்றுமில்லை.

வினா:— இப்படி இரண்டு நிர்வாஹங்கள் சொல்லக்கூடிய இடம் மற்றொன்று காட்டியருள முடியுமா? (விடை) காட்ட முடியாமலென்ன? திருவெஃகாவிலெம் பெருமான் வடமொழியில் யதோக்தகாரீ என்றும், தென்மொழியில் சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளென்றும் திருநாமம் பெற்றிருக்கிறானன்றோ? யார் சொன்னபடி செய்தவர்? என்று கேள்விவரின், ஸரஸ்வதியால் நேர்ந்த வேள்வித் தடையைப் போக்கித் தர வேணுமென்று பிரமன் பிரார்த்தித்தபடியே செய்தவர் என்றும், "பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்றும் "விரித்துக்கொள்" என்றும் திருமழிசைப்பிரான் சொன்னபடியே செய்தவர் என்றும் இருவகையாகவும் நிர்வஹிப்பதுண்டன்றோ.

வினா:—இப்போது தேவரீர் ஸாதித்ததில் ஒருசங்கை;—ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் தையில் மகத்தன்று கண்டருளும் பைந்நாகப்பாய்சுருட்டியுத்ஸவத்தைப்பற்றி ஒரு ஸந்தேஹம். அசலமூர்த்தியான அர்ச்சாவதாரப் பெருமாள் திருமழிசைப்பிரானைப் பின்சென்று தானும் எழுந்து போனாரென்றும், அவர் மீண்டவாறே தானும் மீண்டாரென்றும் கதை சொல்லுவதும், அதை ஒரு உத்ஸவமாக நடத்திக் காட்டுவதும் பரிஹாஸ்யமென்று சிலர் சொல்லுகிறார்களே; இதில் தேவரீருடைய திருவுள்ளமென்ன? (விடை) தேசிகன் ஸாதித்த வேகாஸேதுஸ்தோத்ரமென்கிற ஸ்ரீயதோக்தகாரிஸ்தோத்ரத்தில் ஆறும் சுலோகத்தில் இவ்வைதிஹ்யம்

வெகு சமத்காரமாக அநுஸந்திக்கப்பட்டுள்ளது. "ப்ரத்யாதிசந்தி பவஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுசந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்பது அந்த சுலோகம். இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்பெருமான் பக்தனைப் பின்சென்று, போவதும் வருவதுமான ஸஞ்சாரஞ்செய்தருளின படியை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸார காந்தாரத்தில் போவது வருவதான ஸஞ்சாரம் தொலையுமென்கை. மஹாமேதாவிகளான பூருவர்களுக்குத்தோன்றாத அநுபபத்திகளன்றோ இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோன்றுகின்றன.

**விஞ:—** அடியேன் ஸந்தேஹங்கொண்டு கேட்கும் விஷயங்களை அடியேன் ஸொந்தமாகக் கேட்பதாய்க் கருதக்கூடாது. ஆங்காங்குப் பலர் பேசிவருகின்ற குதர்க்கங்களை தேவரீரிடத்தில் விஜ்ஞாபிக்கிறேனித்தனை. தேசிகன் சொல்லியிருக்கிறார், மற்றொருவர் சொல்லியிருக்கிறார் என்று தேவரீர் விடைகூறினால் இதனால் ஆக்ஷேபகர்களுக்கு ஸமாதானமாய்விடுமா? இதைநன்கு திருவுள்ளத்தில் கொண்டு விடைதரவேணும். **(விடை)** இதை நான் தெரிந்து கொள்ளாமலில்லை. நாம் நம் பூருவாசாரியர்களை வ்யாஸபராசராதி மஹர்ஷிகளுக்கும் மேலாகக் கொள்ளுமவர்கள்; அந்த பூருவர்கள் தமிழ் வசனமாக ஏதேனும் எழுதிவைத்திருந்தால் அதில் ஏதேனும் ப்ரக்ஷிப்தமாயிருக்குமோ வென்று சங்கிக்க இடமுண்டு. உலகமெங்கும் கண்டபாடமாக வைத்துக்கொண்டு அநுஸந்தானம் செய்துவரும் சுலோகபத்தமான நூலகளில் அவ்வாறு சங்கிப்பதற்கு இடம் கிடையாது. அந்த நூலகள் 600, 700 வருஷங்களாக எவ்வித ஆக்ஷேபமுமில்லாமல் விளங்கி வரும்போது அவற்றில் அவிச்வாஸம் கொள்ளுமவர்களிருந்தால் அவர்களைப்பற்றி நமக்குக் கவலையே வேண்டா, அவர்களைத் தெளிவுபடுத்த நம்மாலாகாது; நம்மைப்படைத்தவனாலுமாகாது

**விஞ:—** திருமங்கையாழ்வார் நாகப்பட்டினத்தில் ஸ்வர்ணமயமாயிருந்த ஜைநபௌத்த விக்ரஹங்களை ஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீரங்க பிராகார மண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பராப்ரபாவத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரம் மிகவும் அநீதியான செயலாறென்றும் ப்ராமாணிகர்களாய் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதியான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரம பாவனமான மதத்திற்கு இழுக்காகும்" என்றும சிலர் வாதிக்கிறார்களே; தமிழ் வசன நூல்களில் பின்னோர்களால் சேர்க்கப்பட்டதென்கிறார்களே. **(விடை)** பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில், "ஜிதபாஹ்யஜிநாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகால கவி: ப்ரணமேமஹி தாந்" என்கிற ச்லோக ரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்து வைத்த திருமங்கையாழ்வாரது சரித்திரத்தை அநியாயக் கதையென்று சொல்லிவிட்டால் இதை ஸ்ரீவைஷ்ணவ வுலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கற்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீஸூக்திமத்யே புகுத்தப்பட்டதென்று நெஞ்சினாலும் நினைக்கமுடியாதே; இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேறொரு வ்யக்தியால் நிருமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக்கொண்டு நெஞ்சில் தோன்றினபடியெல்லாம் பேசுமவர்களைப்பற்றி நமக்கென்ன கவலை?

**வினா:—** திருவாய்மொழியில் (9-10-5) 'சரணமாகும் தனதாளடைந்தார்க் கெல்லாம், மரணமானால் வைகுந்தங் கொடுக்குப்பிரான்'' என்கிற பாசுரத்தில் ஓர் ஐதிஹ்யம் ஆங்காங்குள்ளவர்கள் சொல்லி வருகிறார்கள். அதாவது, ''மரணமாக்கி வைகுந்தம் கொடுக்கும்பிரான்'' என்று ஆழ்வார் திருவாக்கில் பாடம் வெளிவந் திருந்ததாகவும், ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அதைக்கண்டு ''இப்படியிருந்தால் எம்பெருமான் திருவடிகளில் யாரும் பணியமாட்டார்கள்; வந்து சேர்ந்தவர்களை யெல்லாம் மரணமாக்கி வைகுந்தம் கொடுக்குமவனென்று தேறினால் யாரும் அணுகமாட்டார்களன்றோ; ஆகவே இப்பாடத்தை மாற்றியேயாகவேண்டும்'' என்று துணிந்து ''மரணமானால்'' என்று திருத்திப் பாடம் வழங்கலாயினர் என்ப தாகவும் ஐதிஹ்யம் சொல்லக் கேட்கிறேன். இது உண்மைதானா? **(விடை)** இது ஸம்ப்ரதாய நெறியிற்படிந்த பெரியார்களுக்கு உடன்பாடன்று. மரணமாக்கி யென்று பாடமிருந்திருந்தால் அதைமாற்ற வேண்டிய அவசியமில்லை. அப்படி மாற்றுவதானால் மற்றும் பல பாசுரங்களையும் மாற்றவேண்டிவரும். திருவாய் மொழியிலேயே இரண்டாம்பத்தின் முடிவு பாசுரம்—''அருளுடையவன் தாள் அணை விக்கும் முடித்தே'' என்பது; இதில் 'முடித்து' என்பதற்கு மரணமாக்கி யென்ப தன்றோபொருள். அதை மாற்றாமல் இதை மாத்திரம் மாற்றுவானேன்? அன்றி யும், ஆழ்வார் திருவாக்கில் 'மரணமானால்' என்கிறபாடமே வெளிவந்ததாக ஸகல பூர்வாசாரியர்களும் நன்கு காட்டி வியாக்கியானஞ் செய்துள்ளார்கள். *மாலை நண்ணி* என்கிற திருக்கண்ணபுரப் பதிகத்திலன்றோ *மரணமானாலென் கிறவிந்தச் சந்தையுள்ளது. அப்பதிகத்திற்கு இந்தச்சொல்லே உயிரானதென்று கொண்டு வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். ''சரீராவஸானத்திலே உம்முடைய விருப்பம் நிறைவேற்றக்கடவோம்'' என்று ஆழ்வாரை எம்பெருமான் ஸமாதானம் பண்ணினதாகவும், அதை ஆழ்வார் ''மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' என்று தம்முடைய வனுஸந்தானத்தாலேவெளியிட்டதாகவும் இப்பதிகத் திற்கு ப்ரவேசம் அருளிச் செய்துள்ளார்கள். பாசுர வியாக்கியானத்திலும் ''இப் பாட்டில் *மரணமானாலென்றதைக் கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல் லாம்'' என்று இருபத்துநாலாயிரத்திலும் முப்பத்தாறாயிரத்திலுமுள்ளது. மண வாளமாமுனிகளும் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இப்பதிகத்தின் ஸாரமாக இட்டருளின பாசுரத்தில் ''மால் உமது வாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின் முடி வில். சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து'' என்றருளிச் செய்துள்ளனர். ஆசார்ய ஹ்ருதயத்திலும் (4-9.)''இளிப்பத்திலொன்று நசமதசையிலே பேறென்று ......நாளிட்டுப்பெற்றவர்'' என்றுள்ளது. ஆழ்வார்க்கு எம்பெருமான் நாளிட்டுக் கொடுத்ததாகவும் அதை ஆழ்வார் தம் திருவாக்கால் அநுஸந்திப்பதாகவுமன்றோ வஸ்துஸ்திதியில் ப்ரமேயமுள்ளது. ஆகவே ''மரணமாக்கி வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' என்று பாடமிருந்ததாக ப்ராமாணிகர்கள் நெஞ்சால் நினைக்கவும் நியாய மில்லையென்று சுருக்கமாகத் தெரிவித்தபடி.

**வினா:—**''தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன் இராமானுசன்'' என்று நூற்றந்தாதி லருளிச்செய்யும்படியாக எம்பெருமானார்க்குத் தேவப்பெரு மாள் திருவடியிணையில் அன்புமிகுந்திருப்பதற்கு உரிய காரணமொன்று ஸாதிக்க

வேணும். (விடை) திருவரங்கம் பெரியகோயிலில் ஸ்ரீவைஷ்ணவ தர்சன துரந்தரராக வாழ்ந்துவந்த ஆளவந்தார் காஞ்சீபுரியில் வாழும் ஸ்ரீராமாநுஜருடைய ப்ரபாவங்களைக் கேட்டு இவரைக் காணவேணுமென்னுமாவலுடனே காஞ்சிக் கெழுந்தருளி ஸ்ரீஹஸ்திகிரியிலே மங்களாசாஸனஞ் செய்து ஈழே திருப்புற்றி னருகே திருவனந்தாழ்வானையும் கரியமாணிக்கப் பெருமானையும் ஸேவியாநிற்க, அங்கே யாதவப்ரகாசர் தம்வித்யார்த்திகளின் ஸமூஹத்துடனே பெருமானை ஸேவித்து அவ்விடத்தே ப்ரதக்ஷிணமாக வாராநிற்க, ஆளவந்தார் தம் அருகேயிருந்த திருக்கச்சிநம்பியை நோக்கி 'இத்திரளிலே இளையாழ்வார் யாவர்?' என்று கேட்க, அவரும் 'அதோ சிவந்து நெடுகி ஆஜாநுபாஹுவாய் வருகிறவர்' என்று காட்ட, ஆளவந்தாரும் திருவுள்ளம் பூரிப்பக் குளிரநோக்கியருளி 'ஆம் முதல்வனிவன்?' என்று விசேஷகடாக்ஷம் செய்தருளியும், தேவப்பெருமானை நோக்கி ஹ்யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: சருணோதி பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:; அந்த; ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி' என்றொரு ச்லோகத்தால் இளையாழ்வார் நம் தர்சன ஸ்தாபகராம்படி அருள் புரிகைக்காகச் சரணாகதி செய்தும் எழுந்தருளினரென்று இதிஹாஸம். ஆக, தேவப்பெருமாளுடைய திருவருளடியாகவே ஸ்வாமி விசேஷஅபிவிருத்தியையடைந்ததனாலேயென்று கொள்க.

வினா:— அடியேன் வேறொரு காரணம் கேள்விப்பட்டிருக்கிறேன். அதையும் ஸாதிக்கலாமோ? (விடை) யாதவப்ரகாசருடைய கங்காயாத்திரையிலே ஸ்வாமியும் அந்வயித்து எழுந்தருளுகையில், விந்தியாடவியில் நிர்ஜலமும் நிர்ஜனமுமான நீள் காட்டிலே பிரிந்து திரும்பவேண்டியதானபோது 'ஆரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய் போல் துளங்கி நின்று வழிதிகைத்து நிற்கையிலே, தேவப்பெருமாள் ஒரு வில்லியாகவும் பெருந்தேவித்தாயார் அவனது மனைவியாகவும் வேடம்பூண்டு ஸ்வாமிக்குத் துணையாக வந்து சேர்ந்து வழி நடத்தி ஓரிரவிலேயே கச்சிப்பதியில் கொணர்ந்து சேர்த்துச் சாலக்கிணற்றில் ஸ்வாமி திருக்கையால் தீர்த்தம் வாங்கிப் பருகி விடாய் தீர்ந்ததற்கு அறிகுறியாக அன்று முதல் ஸ்வாமி நாடோறும் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தங்கொணர்ந்து ஸமர்ப்பித்து வந்தார்; இவ்வைதிஹ்யத்தை யதிராஜஸப்ததியில் 'வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்' என்கிற ச்லோகத்தில் 'தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி' என்ற உத்தரார்த்தத்தில் பொறித்தருளினர் வேதாந்த வாசிரியர். இதுவும் ஒரு காரணந்தான்; யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதிஸந்யாஸியின் கேள்விகளுக்கெல்லாம் ஸ்வாமி விடையளித்து வருகையில், முடிவாக வொரு விஷயத்திற்கு விடையிறுக்கமுடியாமல் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி வந்து மிகவும் வியாகுலராய் அமுது செய்யாமலே திருக்கண்வளர்ந்தருளாநிற்க, அன்றிரவு தேவப்பெருமான் கனவிலே யெழுந்தருளிக் காட்சிதந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமி உள்ளந்தேற்றி அந்த யஜ்ஞமூர்த்தியைத் திருத்திப் பணிகொண்டு தேவப்

பெருமாளுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்கொண்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி உலகப்ரஸித்தமாம்படி அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்று அவர்க்குத் திருநாமம் சாத்தியருளினர். இவ்விதிஹாஸமும் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் அன்பு பூண்டிருப்பதற்கு உபபாதகமாகும். ... ... •

வினா:—அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லியனுப்பினள். அதைப் பெருமாளிடம் விண்ணப்பம் செய்யா நின்ற திருவடி, ❊ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ!❊ ❊ஊர்த்வம் மாஸாந் நஜீவேயம்❊ என்று சொன்னதைப் விண்ணப்பஞ் செய்தான். 'இனி ஒருமாதமளவுதான் ஜீவித்திருப்பேன், அதற்குமேல் ஜீவித்திருக்க முடியாது' என்று பிராட்டி சொன்ன வார்த்தை. இப்படி சொல்லக்கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப்பிரிந்த பிராட்டி இன்னமும் ஒரு மாதப்வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒரு மாதம் ஜீவித்திருந்தாளாகில் நீடுழி காலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னால் அப்படி ஜீவித்திருக்க முடியாது; [*ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்*] குவளையங்கண்ணியான அப்பிராட்டியைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் ஜீவிக்ககில்லேன் நான்" என்று கூறியிருக்கிறார். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராயுமிடத்து விச்லேஷத்தில் தரியாமை யென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகிறதல்லவா? இது கூடுமோ? ❊அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா❊ என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொழுதும் அகலகில்லேனென்று சொல்லுபவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றோ 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் (ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம்)என்று ஒருமாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்கமுடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லேனென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசந விந்யாஸம் செய்திருப்பது நன்றாயில்லையே. (விடை) மேலே எடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யெனில்; பிராட்டியின் திருமேனியழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்ததென்பது இங்குத் தெரிய வருகிறது. பிராட்டியின் திருமேனியழகெல்லாம் ஒரு தட்டாய், கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினாலும், அதுதானும், 'புமாம் த்ருஷ்டி சித்தாபஹாரி'யென்று பேர்பெற்ற இராமபிரானது ஸௌந்தர்யத்திற்காட்டிலும் வீறுபெற்றிருக்கையாலும் அப்படிப்பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தினால் [விநா தாம் அஸிதேக்ஷணாம் என்பதனால்] வெளிவந்த பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒரு மாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின் வார்த்தை இதற்குப் பிரதிகோடியாய் பெருமாளைப் பிரிந்து ஒருமாதம் ஜீவித்திருக்க முடியுமென்று சொன்னமுகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்ததன்றென்பது காட்டிற்றாகிறது. ... ... ... ... ... •

வினா:— அடியேனுடைய வினாவுக்கு இது நேர்மையான விடையாகத் தோன்றவில்லையே. எமபெருமானுடைய க்ஷணகாலவிச்லேஷத்தையும் ஸஹித்

திருக்கமாட்டாத பிராட்டி தன்வாக்கினால் ஒருமாத காலம் பிரிவையாற்றியிருக்க முடியுமென்று தெரிவித்தது கூடுமா? என்றன்றோ அடியேன் வினவினேன். அதற்கு விடை வரவில்லையே. (விடை) இதை நான் தெரிந்துகொள்ளாமலில்லை. பிராட்டி திருவாக்கிலிருந்து இவ்விதமான வசன வ்யக்தியை வெளியிடுவித்த வான்மீகி முனிவருடைய கருத்து பிராட்டியின் கண்ணழகு அதிவிலக்ஷணமானது என்பதை வெளியிடுவதற்காகவேயென்று கொள்ளாய். ... — ...

வின:— எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானாப்போலே பிராட்டிக்குப் புருஷகாரத்வமும உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு. எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கும்போது அவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? (விடை) குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே ஸர்வபூத ஸுஹ்ருத்தான அவன் திருவுள்ளத்திலே, சேதநன் அளவுகடந்து பண்ணும அபராத மடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றத்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காகவே. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜனிப்பிக்குமவள் பிராட்டி. ஆகையாலே ஸம்பந்தவுணர்ச்சி யுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகார புரஸ்கரணம அவசியமேயாகும். ...

வின:— பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமா? விபலமாகாதா? (விடை) "அகில ஜகந்மாதரம்" என்கிறபடியே சேதநர்க்கு இவள் மாதாவாய் அந்த ஸம்பந்த மடியாக இவர்களது வருத்தங்கண்டு பொறுத்திருக்க மாட்டாதேயிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்நியாய் "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக்கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே இவளுடைய புருஷகாரம் ஒருவகையாலும் விபலமாக மாட்டாது ... ... ... ... ...

வின:— விபலமாகமாட்டாதென்று எதுகொண்டு கெட்டியாகச் சொல்லுவது? (விடை) உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்ய வேணுமோ அவரிடத்தில் தம வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்ய மிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்பது நிர்விவாதமான விஷயம். அதுகொண்டுதான் கெட்டியாகச்சொல்வது. ...

வின:— இதெல்லாம் உண்மையே; ஈச்வரனே கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத்தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டி தான் என்ன செய்யமுடியும்? (விடை) இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் ஸீதையாகப்பிறந்து சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்து மாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை முன்னம் மரத்தின்

மேல் மறைந்திருந்து கண்ட அனுமான், 'பெருமாள் வெற்றி பெற்ற பின்பு இவர் களைப் பார்த்துக்கொள்வோம்' என்று ஆறியிருந்து ராவண வதமான பின்பு ஓடி வந்து 'இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத் திருக்குமெனக்கு இடமளிக்கவேணும்' என்று (பிராட்டியை நோக்கிச்) கேட்டவள விலே, சொல்மிறுங்கனை அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். அப்படிப்பட்ட விவள் * அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான் * என்கிறபடியே தன் போக்ய தையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய் * நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம்பி ரானேக * என்கிறபடியே 'மாயா மிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறி யாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிக னாயிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேணுமோ?

வினா.— நாம் எம்பெருமானை ஆச்ரயிப்பதற்கு ஏதேனும் காலம் பார்க்க வேண்டியதுண்டோ? (விடை) த்வயத்திலுள்ள ஸ்ரீமச்சப்தத்தினால், புருஷகார பூதையானபிராட்டியும் ஈச்வரனுமான இருவருடையவும் சேர்த்தியானது எப்போது முண்டென்று காட்டப்பட்டதாகும். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி எம் பெருமானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர ஸத்பாவமென்று கொள்க. சேதனர்களின் அபராதங் களைக் கணக்கிட்டு தண்டிக்கவல்லவனான எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தை யும், சேதநர் செய்யும் குற்றங்களின் மிகுதியையுங் கண்டு 'ஐயோ? என்னாகுமோ?' என்கிற பயத்தாலே எம்பெருமானைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள். இப்படி இவளிருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை. ஆக, பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில் எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாமென்பது தேறி நிற்கும். 'புருஷகாரம் செய்பவள் அருகேயிருக்குங் காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமய ப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்கவேண்டியதத்தனையே

வினா:— திருவடியென்று வழங்கப்படுகிற அனுமான் ❋அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிப் பெருமாள் ❋தன்தாமமேவின காலத்தில் பரமபதம் சென்று சேர்ந்தவர்தானே; அப்படியிருக்க, அவர் இன்னமும் இந்த விபூதியிலேயே இருப்ப தாகச் சொல்லப்படுகிறதே. இது ப்ராமாணிகமாகுமோ? (விடை) இதில் என்ன ஸந்தேஹம்? அந்த அனுமான்தானே ❋ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி❋ என்று சொல்லி த்தான் பரமபதத்திற்கு வருவதை மறுத்து விட்டதாக உத்தர ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே. ''பரமபதத்தின் பேர் சொல்லுகைதானும் அஸஹ்ய மாகையாலே (அந்யத்ர) என்கிறார் என்று நம் ஆசாரியர்கள் அருளிச்செய்து மிருக்கிறார்களே. கூரத்தாழ்வானும் பட்டரும் ஸாதித்திருக்கிறார்களே. ...

(தொடரும்)

| | | | |
|---|---|---|---|
| நம்பி கல்லார் | (என் வார்த்தையை) நம்பிக் கற்கின்றார்களில்லை ; | எது பேறு என்று காமிப்பரே | நமக்குப் புருஷார்த்தம் ஏது? என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் ஐயோ ! |

(ஸ்ரீராமாநுஜ நாமஸங்கீர்த்தநமே புருஷார்த்தமென்று அறியாதவர்களாய்)

* * *—''இராமாநுசனென்று சொல்லுமினே'' என்று ஸ்ரீராமாநுஜ நாம ஸங்கீர்த்தனம் பண்ணும்படி உலகத்தாரை வேண்டினார் கீழ்ப்பாட்டில். ஒருவரும் இவர்சொல்லை ஆதரியாமையாலே 'ஐயோ! இவ்வுலகத்தார் பாழாய்ப்போகிறார்களே! உய்யும் வழியை நாம் உரைத்தும் இவர்கள் உணரமாட்டாமல் தடுமாறுகின்றனரே!' என்று இரங்கிப் பேசுகிறார் இதில்.

வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யோபய வேதாந்த ப்ரவர்த்தகராகையாலே ஸர்வஜ்ஞராயும் ஸத்துக்களாலே ஸேவ்யராயுமிருக்கிற எம்பெருமானாருடைய திருநாமத்தை விரும்பி ஓதுங்களென்று சொன்னால் இப்பெரிய பூமண்டலத்தில் ஒரு பாவியும் ஓதமாட்டேனென்கிறான்; உஜ்ஜீவிக்க என்ன வழி? என்று விசாரித்துக் கொண்டு அலைந்துழல்கின்றார்களே யொழிய உய்யும்வழியை யுரைத்தால் உகந்து கைப்பற்றுவாரில்லையே, இதென்னவுலகியற்கை! என்று வருந்துகிறார்.

**சொல் ஆர் தமிழொருமூன்றும்**=இயல் இசை நாடகம் என மூவகைப்படும் தமிழ். ''எழுத்துப் பதின்மூன்று இரண்டசை சீர்முப்பத்தேழ்தளை ஐந்து, இழுக்கிலடி தொடை நாற்பதின் மூன்று ஐந்துபா இனம் மூன்று, ஒழுக்கிய வண்ணங்கள் நூறு ஒன்பது ஒண்பொருள்கோள் இருமூ, வழுக்கில்விகாரம் வனப்பெட்டு யாப்புள் வகுத்தனவே'' என்று தொகுத்து உணர்த்தப்படும் இயற்றமிழின் இலக்கணங்கள். குறிஞ்சி, செருந்தி, இந்தளம், கொல்லி, காமரம், தக்கேசி, பஞ்சமம், கைசிகம் காந்தாரம் பாலையாழ் முதலிய பண்களைக் கொண்டுள்ள தமிழ் இசைத்தமிழாம். இயலுக்கும் இசைக்கும் பொதுவானது நாடகத் தமிழாம். திராவிட சாஸ்த்ரங்களெல்லாவற்றையும் அறிந்தவர் எம்பெருமானார் என்கிறது.

**சுருதிகள் நான்கும்**=ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என வேதங்கள் நான்காம். **எல்லையில்லா அறநெறி**=தர்மசாஸ்த்ரங்கட்கு அளவே யில்லை. **யாவும்**=கீழ்ச்சொன்னவற்றையும் மற்றுமுள்ள கலைகளையும். ... ... 44

**பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி* அப்பேறளித்தற்**
**காறொன்றுமில்லை மற்றச்சரணன்றி* என்றிப்பொருளைத்**
**தேறுமவர்க்குமெனக்கு முனைத்தந்த செம்மை சொல்லால்**
**கூறும்பரமன்று* இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே.** 45

| | | | |
|---|---|---|---|
| இராமாநுச | எம்பெருமானாரே ! | என்று இப்பொருளை | என்கிற இவ்வுண்மைப் பொருளை |
| நின் சரண் அன்றி | தேவரீருடைய திருவடிகளைத் தவிர | தேறுமவர்க்கும் | தெளிவாகத் தெரிந்துகொள்ளிருக்கிற மஹான்களுக்கும் |
| மற்று பேறு ஒன்றும் இல்லை | உபேயம் வேறொன்றுமில்லை; | எனக்கும் | (இந்தத் தெளிவு சிறிதுமில்லாத) எனக்கும் |
| அப்பேறு அளித்தற்கு | தேவரீர் திருவடிகளாகிற அந்த உபேயத்தைத் தருவதற்கு | உனை தந்த செம்மை | (வாசிபாராமல் ஸமமாகவே) தேவரீரைக் காட்டிக் கொடுத்த செம்மைக் குணமானது |
| அச் சரண் அன்றி | அத்திருவடிகள் தவிர | மெய்ம்மை கூறிடில் | உண்மை சொல்லில் |
| மற்று ஆறு ஒன்றும் இல்லை | வேறு உபாயம் ஒன்று மில்லை : | சொல்லால் கூறும் பரம் அன்று | வாய்கொண்டு சொல்லத்தரமன்று [அநுபவித்து உருகுமித்தனை.] |

***—"இராமாநுசன் திருநாமம் நம்பிக் கல்லார கலிடத்தோர்" என்று கீழ்ப்பாட்டில் சொல்லப்பட்டவர்களுள் தாமும் ஒருவராயிருந்தும் தம்மைமாத்திரம் எம்பெருமானார் நிர்ஹேதுகமாக அங்கீகரித்துத் தம் திருவடிகளையே உபாயோபேயமாக நம்பியிருக்கும்படி அத்யவஸாயத்தை உண்டுபண்ணின மஹோபகாரத்தை நினைத்து ஈடுபடுகிறார்.

ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிகள் தவிர வேறொன்றும் ப்ராப்யமல்ல; இதனைப் பெறுதற்கு இத்திருவடிகளே உபாயமாவதன்றி வேறொருபாயமில்லை என்று 'உபாயமும் உபேயமும் எம்பெருமானார் திருவடிகளே' என்றிருக்கும் மஹான்களுக்கு தேவரீர் எவ்வாறு அருள் புரிகின்றதோ அவ்வாறுசவே சிறிதும் வாசிவையாமற் பாவியேனுக்கும் அருள் புரிகின்றதே! இஃது என்ன பெருங்குணம்!! த்ருடவிச்வாஸமுடைய ஆழ்வான் ஆண்டான் போல்வாரை அடிமை கொள்வது போலவே அவிச்வாஸியான என்னையும் அடிமை கொள்வதே! இச்செம்மைக் குணத்தின் பெருமையைப் பாகுபடுத்திச் சொல்ல எனக்கு சக்தியில்லையே யென்று தடுமாறுகின்றார்.

**பேறு**=பெறப்படுவது பேறு, உபேயம். அதாவது பலன், **சரண்** என்ற சொல் சரணம் என்ற வடசொல்லின் விகாரம்; திருவடியென்று பொருள். **ஆறு**-வழி, அதாவது உபாயம். **செம்மை**-பெரியார் சிறியார் என்னும் வாசி பாராமல் எல்லோரிடத்திலும் ஒருங்கே திருவுள்ள முவந்திருத்தல். ஆர்ஜவகுண மெனப்படும்; இதற்கு எதிரான குணம் கௌடில்யம். ... • .. ... 45

**கூறுஞ்சமயங்க ளாறுங்குலைய* குவலயத்தே**
**மாறன்பணித்த மறையுணர்ந்தோனை* மதியிலியேன்**
**தேறும்படியென் மனம்புகுந்தானைத் திசையனைத்தும்**
**ஏறுங்குணனை* இராமாநுசனை யிறைஞ்சினமே.** 46

| | |
|---|---|
| **கூறும் சமயங்கள் ஆறும் குலைய** | மனம்போனபடி சொல்லிக்கொண்டிருக்கிற ஆறு பாஹ்ய மதங்களும் தலைமடக்கும்படி |
| **குவலயத்தே** | இப்பூமண்டலத்திலே |
| **மாறன் பணித்த மறை** | நம்மாழ்வார் அருளிச்செய்த தமிழ் வேதத்தை |
| **உணர்ந்தோனை** | கற்று அறிந்தவராயும் |
| **மதியிலியேன் தேறும்படி** | அஜ்ஞானியான நானும் தெளியும்படியாக |
| **என் மனம் புகுந்தானை** | என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்தவராயும் |
| **திசை அனைத்தும் ஏறும் குணனை** | எல்லா திக்குகளிலும் பரவிய திருக்குணங்களை யுடையவராயுமிருக்கிற |
| **இராமாநுசனை** | எம்பெருமானாரை |
| **இறைஞ்சினம்** | வணங்கினோம். |

***—எம்பெருமானார் செய்தருளின அரியபெரிய உபகாரங்கள் நெஞ்சில் ஊற ஊற, பரவசராய்த் திருவடிகளிலே வணங்குகிறார்.—உலகத்தில் பிரமாணமில்லாமலும் யுக்தியில்லாமலும் மனம் போனபடி சொல்லிக்கொண்டு திரிகிற மதாந்தரஸ்தர்களையெல்லாம் பங்கப்படுத்துவதற்காக நம்மாழ்வார் அருளிச்செய்த தமிழ்வேதமான திருவாய்மொழியை ஓதியுணர்ந்தவரும், அவிவேகியான நான் கூடத் தேறுதலடையும்படி என் நெஞ்சினுள்ளே புகுந்து என் ஸத்தையை நோக்குபவரும், திசைகளெங்கும் பரவிய புகழையுடையருமான எம்பெருமானாரை வணங்கினேனென்றாராயிற்று.

**சமயங்கள் ஆறும்**=தேஹாத்மவாதி, தேஹபரிணாமாத்மவாதி, விஜ்ஞாநாத்மவாதி, சூந்யவாதி, அத்வைதவாதி, சிவபரத்வவாதி—என்றிப்படி ஆறு மதஸ்தர்களுண்டு. வேறு வகைகளும் உண்டு. எல்லா மதங்களும் திருவாய்மொழியில் நெற்செய்யப் புல்தேயுங்கணக்கிலே தொலைக்கப்பட்டனவென்க. **குவலயம்**—வடசொல்.

நேரும்படி—'ஒரு பெரிய ஞானம் நாம் ஸம்பாதிக்க வகையில்லையே! என் செய்வோம்' என்று தடுமாறிக்கிடந்த நானும் 'இனி நமக்கொரு குறையுமில்லை' என்று தேறி மார்விலே கையைவைத்துறங்கும்படியாக என்கை. ... ... 46

இறைஞ்சப்படும் பரனீசனரங்கனென்று* இவ்வுலகத்து
அறஞ்செப்புமண்ணலிராமாநுசன்* என்னருவினையின்
திறஞ்செற்றிரவும் பகலும்விடாது என்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான்* எனக்காரும் நிகரில்லையே. 47

| | | | |
|---|---|---|---|
| இறைஞ்சப் படும் பரன் ஈசன் அரங்கன் என்று | 'எல்லாராலும் வணங்கத் தக்க பரதெய்வம் (எது வென்றால்) ஈசனாகிய ஸ்ரீரங்கநாதனேயாம்' என்று | பகலும் இரவும் விடாது | ஸர்வ காலத்திலும் |
| இ உலகத்து | இப்பூமண்டலத்திலே | என் தன் சித்தை உள்ளே | என் ஹ்ருதயத்தினுள்ளே |
| அறம் செப்பும் | ஸாக்ஷாத் தர்மத்தை அருளிச் செய்யுமவராய் | நிறைந்து | பரிபூர்ணராகி |
| அண்ணல் | ஸர்வஸ்வாமியான | ஒப்பு அற இருந்தான் | (இவ்விருப்புக்கு ஒப்பில்லாத படி எழுந்தருளியிருக்கிறார்; |
| இராமாநுசன் | எம்பெருமானார் | எனக்கு | இப்படிப்பட்ட அருளைப் பெற்ற எனக்கு |
| என் அருவினையின் திறம் செற்று | என்னுடைய போக்க முடியாத கர்மஸமூஹத்தைப் போக்கி | ஆரும் நிகர் இல்லை | ஒப்பாவார் ஆருமில்லை |

***—"என்மனம் புகுந்தானை" என்று கீழ்ப்பாட்டில் சுருங்கச் சொன்னதை விரித்துரையா நின்றுகொண்டு பெருநீ பாக்கியம்பெற்ற எனக்கு ஒப்பார் ஆருமில்லை யென்கிறார்.

ஸ்ரீரங்கநாதனே எல்லாரும் வணங்கத்தக்க பரதெய்வமென்னும் உண்மையை உலகத்தார்க்கு உபதேசித்து எல்லாரையும் பகவத் ஸமாச்ரயணத்தில் ருசியுடையவர்களாக்கிப் போருகின்ற எம்பெருமானார் என்னுடைய தீவினைகளை வேரோடே களைந்தொழித்து அநவரதமும் எனது ஹ்ருதயத்தினுள்ளேபரிபூர்ணராயெழுந்தருளியிரா நின்றார்; இப்படிப்பட்ட பரமபாக்கியம் பெற்றவன் இவ்வுலகில் நானொருவனேயாகையால்* இல்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே. ... ... ... ... 47

நிகரின்றிநின்றவென் நீசதைக்கு* நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை யருட்குமஃதேபுகல்* புன்மையிலோர்
பகரும்பெருமை யிராமாநுச இனி நாம்பழுதே
அகலும் பொருளென்* பயனிருவோமுக்கு மானபின்னே. 48

| | | | |
|---|---|---|---|
| புன்மையிலோர் பகரும் பெருமை இராமாநுச | மஹான்கள் பேசவேண்டும்படியான பெருமையையுடைய எம்பெருமானாரே ! | அஃதே புகல் | (என்போல்வாருடைய) அந்தத் தாழ்மையே சரணம்; (ஆக இவ்வகையாலே) |
| நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு | என்னுடைய ஒப்பற்ற தாழ்மைக்கு | இருவோமுக்கும் பயன் ஆனபின் | அடியேனால் தேவரீருக்குப் பயன், தேவரீரால் அடியேனுக்குப் பயன் என்று ஸித்தமானபின்பு |
| நின் அருளின் கண் அன்றி | தேவரீருடைய க்ருபையின் பக்கலில் தவிர | இனி | இனிமேலும் |
| புகல் ஒன்றும் இல்லை | வேறு எவ்விடத்திலும் ஒதுங்க இடமில்லை; | பழுதே | வியர்த்தமாக |
| அருட்கும் | தேவரீருடைய அந்த க்ருபைக்கும் | அகலும் பொருள் என் | பிரிந்திருக்கைக்குக் காரணம் என்ன ? |

***—“எனக்காரும் நிகரில்லையே” என்று களித்துக் கூறின அமுதனாரை நோக்கி எம்பெருமானார் “இக்களிப்பு உமக்கு எத்தனை நாளைக்கு நிற்கும்? நான் உம்மை விட்டு விடவுங்கூடும்; நீர் என்னை விட்டுவிடவுங்கூடும். இரண்டத்தொன்று நேர்ந்தால் இக்களிப்பு மாறக்கூடியதுதானே” என்ன—; இனி நாம் வீணாக விட்டுப் பிரிவதற்குக் காரணமேயில்லை யென்கிறார்.

ஸ்வாமிந்! நீசர்களில் என்போல்வாரில்லை; இப்படிப்பட்ட என்னுடைய நீசத்தனம் நீங்குவதற்கு தேவரீருடைய திருவருளேயன்றி வேறொரு ஸாதனமும் இல்லை. தேவரீருடைய திருவருளுக்கும் நான் தவிர வேறொரு பாத்திரமில்லை. ஆகவே, என்னை விட்டால் உமக்குக் கதியில்லை, உம்மை விட்டால் எனக்குக் கதியில்லையென்னும்படியான ஸம்பந்தவுறைப்பு இருக்கும்போது, தேவரீரும் என்னை விட்டு நீங்கக் காரணமில்லை, அடியேனும் தேவரீரைவிட்டு நீங்கக் காரணமில்லை என்றாராயிற்று.

[“ததஹம் த்வத்ருதே நநாதவாந் மத்ருதேத்வம் தயநீயவாந்நச—விதி நிர்மித மேததந்வயம் பகவந் பாலய மாஸ்மஜீஹப:”] என்ற ஆளவந்தார் ஸ்தோத்ரரத்ந ச்லோகமும் இப்பொருள் கொண்டதே.

நீசதை—‘நீசதா’ என்ற வடசொல் ஈறுதிரிந்ததாயிற்று. நிசஸ்யபாவ: நீசதா = நீசனாயிருக்குந்தன்மை. அருட்கும்:தேயுகல்=நீசர்கள் விஷயத்தில் க்ருபை பண்ணினாலன்றோ அருள் விளங்குவதும் பயன் பெறுவதும். ... ... 48

ஆனதுசெம்மையறநெறி* பொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றி இறந்ததுவெங்கலி* பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல் சென்னிவைத்துத்
தானதில்மன்னும்* இராமாநுசனித்தலத்துதித்தே. 49

| | | | |
|---|---|---|---|
| பூ கமலம் தேன் | தாமரைப் பூக்களிலுண்டான மகரந்தமானது | இராமாநுசன் | எம்பெருமானார் |
| நதி பாய் | ஆறுகப் பெருகப் பெற்ற | இத்தலத்து உதித்து | இப்பூமியிலே திருவவதரித்ததனால் |
| வயல் | கழனிகளையுடைய | செம்மை அறம் நெறி | சீரானான தர்ம மார்க்கமானது |
| தென் அரங்கன் | ஸ்ரீரங்கத்திலே எழுந்தருளியிருக்கிற பெரிய பெருமாளுடைய | ஆனது | வாழ்ந்தை பெற்றது ; |
| கழல் | திருவடிகளை | பொய்ம்மை அறுசமயம் | பொய்யே நிறைந்து கிடக்கிற அறு சமயங்களும் |
| சென்னி வைத்து | சிரஸாவஹித்துக்கொண்டு | பொன்றி போனது | நாசமடைந்தன ; |
| தான் அதில் மன்னும் | தாம் அத்திருவடிகளிலேயே ப்ரவணராயிருக்கிற | வெம் கலி இறந்தது | கொடிய கலியுகமும் மாண்டது. |

***—எம்பெருமானார் திருவவதரித்த பிறகே இவ்வுலகத்துக்கு உண்டான நன்மைகளை அருளிச் செய்கிறார் இதில். தடாகங்களிலுள்ள தாமரைப் பூக்களினின்றும் தேன் ஆறுகப் பெருகி வயல்களில் பாயும்படியான ஸம்ருத்தி பொருந்திய அழகிய திருவரங்கத் திருப்பதிக்குத் தலைவரான பின்பு பெருமானுடைய திருவடிகளிலே பேரன்பு பூண்ட எம்பெருமானார் இந்நிலவுலகத்தில் திருவவதரித்த பின்பு என்னாயிற்றென்றால், முன்பு குத்ருஷ்டிகளினால் அழிந்து கிடந்த தர்மமார்க்கம் மீண்டு நிலைபெற்றது; சாஸ்த்ர விருத்தமான மதாந்தரங்களெல்லாம் தலைசாய்ந்தன; கலிதோஷமும் கெட்டுப்போயிற்று. ... ... ... 49

உதிப்பனவுத்தமர் சிந்தையுள்* ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன* கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவிப் பாவினம்பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன்* இராமாநுசன்றன் னிணையடியே. 50

| | | | |
|---|---|---|---|
| பாவு தொல் சீர் | உலகமெங்கும் பரவின நித்ய கல்யாண குணங்களையுடையவரும் | அஞ்சி கொதித்திட | பயப்பட்டுப் பரிதபிக்கும்படி |
| எதி தலை நாதன் | யதிகளுக்குத் தலையான நாயகருமான | மாறி நடப்பன | மாறிமாறியிட்டு நடக்குந் தன்மையுடையன ; |
| இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய | கொள்ளை வன் குற்றம் எல்லாம் பதித்த | அபாரமான வலிய தோஷங்கள் யாவும் அழுந்திக் கிடக்கிற |
| இணை அடி | திருவடியிணைகள் (எப்படிப்பட்டவை யென்றால்) | | |
| உத்தமர் சிந்தையுள் உதிப்பன | உத்தமாதிகாரிகளுடைய திருவுள்ளங்களிலே ப்ரகாசிப்பவை ; | என் புன் கவி | என்னுடைய க்ஷுத்ரமான கவனமாகிய |
| ஒன்னலர் நெஞ்சம் | ப்ரதிபக்ஷிகளுடைய நெஞ்சானது | பா இனம் பூண்டன | பாசுரங்களை (ஸ்தோத்ரமாகப்) பெற்றுக்கொண்டவை. |

* * * :— தமக்குப் பரமப்ராப்யமான எம்பெருமானார் திருவடிகளை வருணிக்கிறார் இதில். உலகம் நிறைந்த புகழுடையராய் யதிஸார்வபௌமரான எம்பெருமானாருடைய திருவடிகள் எப்படிப்பட்டவை யென்றால், வடுகநம்பிபோல்வாரான உத்தமாதிகாரிகளாலே இடைவிடாது சிந்திக்கப்படுவன; பிரதிபக்ஷிகளுடைய நெஞ்சிலே பரிதாபத்தை உண்டு பண்ணுவன; பல்வகைக் குற்றங்கள் நிறைந்த எனது கவிகளையும் ஏற்றுக் கொள்வன — என்றாராயிற்று.

ஒன்னலர் நெஞ்ச மஞ்சிக் கொதித்திட மாறி நடப்பன = பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸிப்பதற்காகப் பலவிடங்களிலும் ஸஞ்சரித்தருளினமை அறிக. **மாறி நடத்தல்** — ஒரு அழகான நடை. நம்பெருமாள் நடைபோலே. ... 50

அடியைத்தொடர்ந்தெழு மைவர்கட்காய்* அன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந் தேர்விடுங்கோனை* முழுதுணர்ந்த
அடியர்க்கமுத மிராமாநுசனென்னை யாளவந்திப்
படியிற்பிறந்தது* மற்றில்லை காரணம் பார்த்திடிலே. 51

| | | | |
|---|---|---|---|
| அன்று | முற்காலத்தில் | அடியர்க்கு | பாகவதர்களுக்கு |
| அடியை தொடர்ந்து | திருவடிகளை அவலம்பித்து | அமுதம் | பரமபோக்யரான |
| எழும் | செருக்கிக்கிளர்ந்த | இராமாநுசன் | எம்பெருமானார் |
| ஐவர்கட்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக [பக்ஷபாதம் பூண்டு] | இப் படியில் | இப் பூமண்டலத்தில் |
| பாரதப்போர் | பாரதயுத்தத்திலே | | |
| முடிய | (துரியோதநாதிகள்) மாளும்படியாக | வந்து பிறந்தது | வந்து அவதரித்தது (எதற்காகவெனில்) |
| பரி நெடு தேர் விடும் | குதிரை பூண்ட பெரிய தேரை நடத்தின | என்னை ஆள | அடியேனை ஆட்கொள்ளுகைக்காகவேயாம் ; |
| கோனை | ஸர்வேச்வரனை | | |
| முழுது உணர்ந்த | (ஸ்வரூப ஸ்வபாவங்களில ஒன்றுங் குறையாதபடி) பூர்த்தியாகத் தெரிந்து கொண்ட | பார்த்திடில் | ஆராய்ந்து பார்க்குமளவில் |
| | | மற்று காரணம் இல்லை | இது தவிர வேறொரு காரணமில்லை. |

***—எம்பெருமானார் இவ்வுலகத்தில் அவதரித்தருளினது என்னையடிமை கொள்ளுதற்காகவேயன்றி வேறொரு காரியத்துக்காகவுமல்ல என்கிறார்—தன்னையே சரணமாகப்பற்றின பஞ்சபாண்டவர்களுக்காகப் பாரத யுத்தத்திலே அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்த பரமஸௌலப்யனான கண்ணபிரானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை நன்கறிந்து ஈடுபடுகின்ற பாகவதர்களுக்குப் பரம போக்யரான எம்பெருமானார் அடியேனை அடிமை கொள்வதற்காகவே இந்தப் பூமியில் திருவவதரித்தார்; இதைத்தவிர்த்து வேறொரு காரணமும் இல்லை. ''எதிர்சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கேயருள்கள் செய்ய, விதிசூழ்ந்ததா லெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே'' என்று நம்மாழ்வார் அநுஸந்தித்தவாறு நினைக்கத்தக்கது. ... ... ... ... ... 51

பார்த்தானறுசமயங்கள்பதைப்ப* இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினேனிடைத் தான்புகுந்து*
தீர்த்தானிருவினை தீர்த்தரங்கன்செய்ய தாளிணையோ
டார்த்தான்* இவையெம்மிராமாநுசன்செய்யு மற்புதமே. 52

| | | | |
|---|---|---|---|
| | (எம்பெருமானாரானவர்) | இரு வினை | பெரிய பாவங்களை |
| அறு சமயங்கள் பதைப்ப | (வேதபாஹ்யங்களான) ஆறு தர்சநங்களும் துடிக்கும் படியாக | தீர்த்தான் | போக்கியருளினார்; |
| பார்த்தான் | திருக்கண் செலுத்தினார்; | தீர்த்து | பாவங்களை போக்கினது மன்றியில் |
| இப் பார் முழுதும் | இப்பூமண்டலம் முழுவதையும் | அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| புகழ்கொண்டு | (தமது) கீர்த்தியினாலே | செய்ய தாள் இணையோடு ஆர்த்தான் | அழகிய திருவடிகளோடே (என்னை) அந்வயிப்பித்தார்; |
| போர்த்தான் | மூடிவிட்டார்; | இவை | ஆகிய இக்காரியங்களெல்லாம் |
| புன்மையினேன் இடை | நீசனான அடியேன் பக்கலிலே | எம் இராமாநுசன் செய்யும் அற்புதம் | எமக்கு ஸ்வாமியான எம்பெருமானார் செய்தருளின ஆச்சரியச் செயல்களாம். |
| தான் புகுந்து | தாமாகவே (நிர்ஹேதுக க்ருபையினால்) வந்து புகுந்து | | |

***:—எம்பெருமானாருடைய ஆச்சரியமான சில செயல்களை எடுத்துக் கூறுகின்றார்.—சாக்யர் உலூக்யர் பௌத்தர் சார்வாகர் பாசுபதர் காணாதர் என்றிப்படி சொல்லப்படுகிற புறமதத்தவர்களை யெல்லாம் நடுங்கச்செய்தார்; இப்பூமண்டலமெங்கும் தமது திருப்புகழே பரவும்படி செய்தார்; ஆத்மகுண மொன்றில்லாத என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து என் பாவங்களைப் போக்கி அழகிய மணவாளனுடைய ஸ்ரீபாதங்களிலே என்னை ஆச்ரயிக்கச் செய்தார்; இப்படியாக எம்பெருமானார் செய்தருளுமவையெல்லாம் மிக அற்புதமானவை. ... 52

அற்புதன்செம்மை யிராமாநுசன்* என்னையாளவந்த
கற்பகங்கற்றவர் காமுறுசீலன்* கருதரிய
பற்பல்லுயிர்களும் பல்லுலகியாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை* இந்நானிலத்தேவந்து நாட்டினனே. 53

| | | | |
|---|---|---|---|
| என்னை ஆள வந்த | என்னை ஆட்கொள்வதற்காக அவதரித்த | அற்புதன் | ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையவரும் |
| கற்பகம் | உதாரரும் | செம்மை | ருஜுவாயிருக்குந் தன்மை பொருந்தியவருமான |
| கற்றவர் காமுறு சீலன் | ஞானிகள் ஆசைப்படும் படியான சீலகுணத்தை யுடையவரும் | இராமாநுசன் | எம்பெருமானார்.— |

| | | | |
|---|---|---|---|
| கருத அரிய பல் பல் உயிர்களும் | நினைக்கவும் முடியாதபடி எண்ணிறந்திருக்கிற ஆத்ம வர்க்கங்களும் | பரனது என்னும் நல் பொருள் தன்னை | எம்பெருமானுடைய ஸொத்துக்களாம் — என்கிற ஸாரார்த்தத்தை |
| பல் உலகு யாவும் | (அவ்வாத்மாக்களுக்கு இருப்பிடமான) அளவிறந்த எல்லா வுலகங்களும் | இந்நானிலத்தே வந்து நாட்டினன் | இவ்வுலகத்திலே வந்தவதரித்து ஸ்தாபித்தருளினார். |

***:—எம்பெருமானார் மதாந்தரங்களைக் கண்டித்து நிலைநாட்டிய ஸித்தாந்தம் இன்னதென்கிறார்.—சிறந்த ஞானிகளனைவரும் கொண்டாடுதற்குரிய திருக்குணங்களையும் அதிமாநுஷ வ்யாபாரங்களையும் உடையரான எம்பெருமானார் இவ்வுலகில் திருவவதரித்து "ஸகல ப்ராணிகளும் அந்தப்பிராணிகளுக்கு இருப்பிடமாயுள்ள ஸகல லோகங்களும் ஸ்ரீமந்நாராயணனுக்கே உரிமைப்பட்டவை" என்கிற பரமார்த்தத்தை நிலைநாட்டியருளினார்.

உலகு + யாவும், உலகியாவும்; "யவ்வரினிய்யாம்" என்பது நன்னூல்விதி. "பல்லுலகில் யாவும்" என்றபாடம் கட்டளைக் கலித்துறையிலக்கணத்திற்குச் சேராதென்று ஜீயருரையில் மறுக்கப்பட்டது. உலகியாவும் என்ற பாடத்திலும் ஓரெழுத்து ஏறுகிறதில்லையோ வென்னில், கீழ்நாற்பத்துமூன்றும் பாட்டின் உரையில் "உரைக்கின்றன னுமக்கியான்" என்றவிடத்தில் உரைத்தோம், கண்டுகொள்க. ... 53

*

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன* நாரணனைக்
காட்டியவேதம் களிப்புற்றது* தென்குருகைவள்ளல்
வாட்டமிலா வண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து* இராமாநுசன் தன் இயல்வுகண்டே. 54

| | | | |
|---|---|---|---|
| மண் உலகில் ஈட்டிய சீலத்து இராமாநுசன் தன் | இப்பூலோகத்தில் மேன்மேலும் திரட்டிக்கொண்ட சீல குணத்தை யுடையரான எம்பெருமானாருடைய | வேதம் | வேதங்களானவை |
| இயல்வு | ஸ்வபாவத்தை | களிப்பு உற்றது | (நமக்கு இனி ஒரு குறையுமில்லையென்று) செருக்கடைந்தன; |
| கண்டு | பார்த்து, | தென் குருகை வள்ளல் | அழகிய திருக்குருகூரில் அவதரித்த உதாரரான ஆழ்வார் (அருளிச்செய்த) |
| நாட்டிய நீச சமயங்கள் மாண்டன | (துஷ்ட யுக்திகளாலே) நிலைநிறுத்தப்பட்டிருந்த க்ஷுத்ர மதங்களெல்லாம் ஒழிந்தன; | வாட்டம் இலா | ஒரு குறையுமற்ற |
| | | வண் தமிழ் மறை | சிறந்த தமிழ் வேதமான திருவாய்மொழி |
| நாரணனை காட்டிய | ஸ்ரீமந்நாராயணனைப் ப்ரதிபாதித்த | வாழ்ந்தது | வாழ்வு பெற்றது. |

***—சிங்கத்தைக் கனவில் கண்டாலும் ஸாமான்யமிருகங்கள் நசித்தொழியும்; அவற்றைக் கொல்லுவதற்காகச் சிங்கம் ஒரு முயற்சியும் செய்யவேண்டா. அதுபோல, இவ்வுலகில் கிளர்ந்து கிடந்த பாஹ்யகுத்ருஷ்டிமதங்களைத் தொலைப்பதற்காக எம்பெருமானார் ஒரு ப்ரயத்நமும் எடுத்துக்கொள்ளவில்லை; அவருடைய இயல்வைக் கண்ட காட்சியில் தானே மதாந்தரங்கள் யாவும் மாண்டு போயின; அவை மாளவே ஸ்ரீமந்நாராயணபரங்களான வேதங்களும் அந்த வேதங்களின் ஸாரமாகிய அருளிச்செயல்களும் பொலிவுபெற்று ஓங்கின — என்றாராயிற்று.

ஈட்டிய சீலத்து — ஒவ்வொரு க்ஷணந்தோறும் ஆச்சரியமான அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே எம்பெருமானாருடைய சீலகுணங்கள் மேன்மேலும் வளர்ந்து கொண்டே வந்தனவென்க. ... ... ... ... 54

கண்டவர் சிந்தைகவரும் கடிபொழில் தென்னரங்கன்*
தொண்டர்குலாவு மிராமாநுசனை* தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல்நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலை மேவித்தொழும்* குடியாமெங்கள் கோக்குலமே. 55

| | |
|---|---|
| தொகை இறந்த | கணக்கில்லாத |
| பண்டரு வேதங்கள் | ஸ்வரப்ரதாநங்களான வேதங்கள் |
| பார் மேல் | இப்பூமியிலே |
| நிலவிட | ஓங்கி வளரும்படி |
| பார்த்தருளும் | செய்தருளினவரும் |
| கொண்டலை | பரம உதாரரும், |
| கண்டவர் சிந்தை கவரும் | கண்டவர்களின் நெஞ்சைக் கவர்கின்ற |
| கடி பொழில் | மணமிக்க சோலைகள் சூழ்ந்த |
| தென் அரங்கன் | தென்னரங்கத்திற்குத் தலைவரான பெரிய பெருமாளுக்கு |
| தொண்டர் | அடிமைப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களால் |
| குலாவும் | கொண்டாடப்படுபவருமான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| மேவி தொழும் குடி | பொருந்தி ஆச்ரயிக்கிற குலம் |
| எங்கள் கோக்குலம் ஆம் | எங்களுக்கு ஸ்வாமியாகக் கூடிய குலமாம். |

***—மனோஹரமான சோலைகளாலே சூழப்பட்ட திருவரங்கத்தில் வாழும் நம்பெருமாளுடைய பக்தர்களாலே கொண்டாடப்படுபவராயும், அளவிறந்த வேதங்கள் மதாந்தரஸ்தர்களால் கெடுக்கப்படாவண்ணம் அவற்றை உல்லாஸப் படுத்தி வளர்த்தருளினவராயும், கேட்டார் கேட்ட அர்த்தங்களையெல்லாம் உபதேசிப்பவராயுமுள்ள எம்பெருமானாரை அடிபணிந்து உஜ்ஜீவிக்கும் மஹான்கள் தாம் அடியேனை ஆள்வதற்கு உரியவர்கள் என்றுராயிற்று. ஸ்ரீராமாநுஜபக்தர்களுக்கே அடியேன் தாஸனுயிருப்பேன் என்றவாறு.

இராமாநுசனை மேவித் தொழுங்குடி எங்கள் கோக்குலமாம்=எம்பெருமானார் என்று எமக்கு ஸ்வாமி; அவரை ஆச்ரயிப்பவர்களே எமக்கு ஸ்வாமிகள். **என்கோக்குல** மென்னுமல் **எங்கள்** என்று பன்மையாகக் கூறியது—தம்முடைய ஸம்பந்திகளையுங் குறிக்கொண்டாம். 

**கோ** என்பதற்கு மேன்மையென்றும் பொருள் உண்டாதலால், **எங்கள் கோக்குலம்**—எங்களுடைய மேன்மையான குலம் (எப்படிப்பட்டதென்றால்), இராமாநுசனை மேவித் தொழுங்குடியாம்—, என்பதாகவும் உரைக்கலாம். "எங்கள் கோக் குடியே" என்றும் பாடமுண்டு; பொருள் ஒன்றே. ... ... ... 55



கோக்குலமன்னரை மூவெழுகால்* ஒரு கூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும் புனிதன்* புவனமெங்கும்
ஆக்கிய கீர்த்தி யிராமாநுசனை யடைந்தபின், என்
வாக்குரையாது* என்மனம் நினையாதினி மற்றொன்றையே. 56

| | |
|---|---|
| கோக்குலம் மன்னரை | க்ஷத்ரியகுலத்து அரசர்களை |
| மூ எழு கால் | இருபத்தொரு தலைமுறையளவும் |
| ஒரு கூர் மழு வால் | கூர்மை பொருந்திய ஒரு மழுவாலே |
| போக்கிய | (பரசுராமாவதாரத்தில்) தொலைத்தருளின |
| தேவனை | எம்பெருமானை |
| போற்றும் | துதிக்கின்ற |
| புனிதன் | பரம பரிசுத்தரும், |
| புவனம் எங்கும் ஆக்கிய கீர்த்தி | திக்கெங்கும் பரவின புகழையுடையவருமான |
| இராமாநுசனை | எம்பெருமானாரை |
| அடைந்தபின் | ஆச்ரயித்த பின்பு |
| இனி | மேலுள்ள காலமெல்லாம் |
| மற்று ஒன்றை | வேறு எந்த விஷயத்தையும் |
| என் வாக்கு | எனது வாக்கானது |
| உரையாது | சொல்லமாட்டாது; |
| என் மனம் | எனது மனமும் |
| நினையாது | நினைக்கமாட்டாது. |